"தாமரை"
(விளம்பர விகிதம்)
முழுப்பக்கம் ரூ. 75. அரைப்பக்கம் ரூ. 40
கால்பக்கம் ரூ. 20/-
(கடைசி வெளிப்பக்கம், உட்புறங்களுக்கு)
ரூ. 100/- ஒரு கலர் ரூ. 175/- இரு கலர்
ரூ. 250/- மூன்று கலர்
அச்சு பக்கம் அளவு: 7" × 5"
மேற்கொண்டு விவரங்களுக்கு அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதவும்
விளம்பர மானேஜர்,
"தாமரை" 32, பிராட்வே, சென்னை-1.

Regd. M. No. 6934 Phone No. 21841

# ஜனசக்தி

JANASAKTHI

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

(வெளியூர் பதிப்பு)

தி ஆர்ய வைத்திய பார்மஸி
(கோயம்புத்தூர்) லிமிடெட்.
தந்தி அமுருதம் P. Box 82 H. O. கோயம்புத்தூர் போன்: 2208
கிளைகள்:—
சென்னை (போன் 85752), கோழிக்கோடு (போன் 984),
பாலக்காடு (போன் 195), ஆலத்தூர் பொன்னானி (போன் 41)
எர்ணாகுளம் (போன் 494), கண்ணனூர் (போன் 92)
மிகவும் உயர்தரமான, மலிவான ஆயுர்வேத
மருந்துகளுக்குப் பெயர் பெற்ற ஸ்தாபனம்.
ஆர்யவைத்தியன் பி. வி. ராமவாரியர்,
பிரதான வைத்தியர் & மானேஜிங் ஏஜெண்டு.

மலர் 16 இதழ் 90] சென்னை 17-11-59 விகாரி௵ கார்த்திகை௴ 1௳ செவ்வாய்க்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# சென்னையில் சர்வகட்சி அணிவகுப்பு வாரம் ஆரம்பம்

## இந்தியக் காவல் படையினர் மிகவும் நன்முக நடத்தப்பட்டனர்

### சீனக் காவல் படையினருக்கு இந்தியப் படையினர் நன்றி

ஹாங்காங், நவ. 14—

இந்திய-சீன எல்லையில் லடக் பகுதியில் சென்ற மாதத்தில் நடைபெற்ற கைகலப்பு சம்பந்தப்பட்ட பத்து இந்தியக் கைதிகளை (போலீஸ்காரர்களை)யும் கொல்லப்பட்ட ஒன்பதுபேர்களின் சடலங்களையும் இந்திய அதிகாரிகளிடம் திருப்பிக்கொடுக்கும் நிகழ்ச்சி சுமுகமான சூழ்நிலையில் நடைபெற்றது, என்று பீகிங்கிலிருந்து நவசீனச் செய்தி ஸ்தாபனம் அறிவித்தது.

இந்திய அதிகாரிகளிடம் ஒப்படைத்ததற்குப் பின், இந்தியப் பிரதிநிதி திரு. எஸ். பி. தியாகி, "இந்திய சர்க்காரும், நானும் சீன மக்களுக்கு மிகவும் நன்றி தெரிவிக்கிறோம்", என்று கூறினார்.

"சீன எல்லையை விட்டுப் புறப்படும்தருணத்தில், கைது செய்யப்பட்டிருந்த இந்தியக் காவல் படையினரின் தலைவர் கரம்சிங் தன் கையை ஆட்டி "சீன சகோதரர்களே, சென்று வருகிறோம்", என்று கூறினார்.

"சீனாவின் திபேத் பகுதியின் வடமேற்கு மூலையிலுள்ள கோங்கா கணவாயிக்கு அருகில் இந்த ஒப்படைக்கும் நிகழ்ச்சி நடைபெற்றது", என்று நவசீன செய்தி ஸ்தாபனம் அறிவித்தது.

சீன அதிகாரிகள் இந்தியக் (கைதிகளை) காவல் படையினரை ஒவ்வொருவராக ஒப்படைத்தனர். அது போன்றே சடலங்களையும் ஒவ்வொன்றாக ஒப்படைத்தனர்.

இந்தியப் படையினரின் ஆயுதங்களையும், வெடிமருந்து குண்டுகளையும் ஒப்படைத்தனர்.

இவர்கள் சீனாவில் இருந்த காலத்தில் சீன எல்லைக் காவலர்களால் மிகவும் நன்முக நடத்தப்பட்டனர். குளிரிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்காகப் பஞ்சு திண்டுகள் நிறைந்த உடைகளும் இதர தினசரித் தேவைகளும்கொடுக்கப்பட்டன.

காயமடைந்தவர்களும் நோய் உள்ளவர்களும் உரிய காலத்தில் வைத்திய சிகிச்சை அளிக்கப்பட்டனர். இந்தியப் படையினர் வீடு திரும்பும் முன், தாங்கள் மிகவும் நல்ல முறையில் நடத்தப்பட்டதற்காக, சீனக் காவலர்களுக்கு மீண்டும் மீண்டும் தங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொண்டனர்.

அந்த 9 பேரின் சவங்களும் சீன எல்லைக் காவல் படையினரால் புதைக்கப்பட்டிருந்தன. அவை திருப்பிக் கொடுக்கப்படும் முன் இந்திய முறைப்படி கட்டப்பட்டன. (ராய்ட்டர்)

## நகர் முழுவதும் சைக்கிள் ஊர்வலங்கள்

### பொதுக்கூட்டத்தில் சர்க்கார் கொள்கைக்கு தலைவர்கள் கண்டன முழக்கம்

சென்னை, நவ. 15—

**தமிழகம் முழுவதும் இன்று முதல் உணவுப் பொருள் விலைக்குறைப்பு சர்வகட்சி அணிவகுப்புகள் ஆரம்பமாகி விட்டன. சகல கட்சிகளையும் சேர்ந்த தலைவர்கள் ஒவ்வொரு ஊரிலும் ஒரேமேடையில் நின்று சகலருக்கும் பொதுவான உணவுப் பிரச்சினையில், காங்கிரஸ் சர்க்காரின் கொள்கையைக் கண்டித்து ஆணித்தரமான புள்ளிவிபரங்களுடன் பேசினார்கள்.**

**சென்னை நகரில் இன்று சென்னை மாவட்ட உணவுப் பொருள் விலைக்குறைப்பு சர்வகட்சிக் குழு சார்பில் இராயபுரம் ஆதம்சாகிப் தெருவில் பல்லாயிரக்கணக்கான மக்கள் திரண்ட மாபெரும் அணிவகுப்பு தோழர் கே. முருகேசன் தலைமையில் நடைபெற்றது.**

அதில் திருவாளர்கள் என். வி. நடராசன், மணலி கந்தசாமி சி. கிருஷ்ணன், என். எஸ். பாண்டியன், இதயவேந்தன், கலைமணி, லஜபதி ஆகியோர் பேசினார்கள்.

#### சைக்கிள் ஊர்வலம்

இன்று சர்வகட்சி சைக்கிள் ஊர்வலங்கள் சகல கட்சிக் கொடிகளுடனும் விலைவாசி எதிர்ப்பு கோஷங்களை முழக்கிக் கொண்டு சென்னை நகரையே கலக்கிவிட்டன.

கூட்டத்தில் போலீஸ் ஜரூர் அதிகமாகக் காணப்பட்டது.

இராயபுரத்தைச் சேர்ந்த முக்கியமான போலீஸ் அதிகாரிகளெல்லாம் கூட்ட நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

#### என். வி. நடராசன்

தி.மு.க. துணைப் பொதுச்செயலாளர் திரு. என். வி. நடராசன் பேசுகையில், "காங்கிரஸ் கட்சிக்குள் டால்மியா போன்ற மோசடிக்காரர்களும், மடாதிபதிகள், பதுக்கல்காரர்கள்போன்ற கொள்ளைக் கூட்டத்தினரும் மலிந்துவிட்டார்களென்றும் அதனால்தான், அவர்களிடமிருந்து தானியக் கொள்முதல் செய்ய காங்கிரஸ் சர்க்காரால் முடியவில்லையென்றும் அரிசிக்காக பெண்கள் கால்கடுக்க நிற்கும் காட்சியைக் கண்டு மந்திரிகள் வெட்கித் தலைகுனிய வேண்டுமென்றும், இந்த மேடையில் நானும் எனது நண்பர் மணலி கந்தசாமியும் இருக்கிறோமென்றால் அவருக்கும் எனக்கும் அனைவருக்கும் பொதுவான வயிற்றுப் பிரச்சினை இருப்பதுதான் என்றும், பசி வந்திடப் பத்தும் பறந்துபோம் என்பதை நாமனைவரும் அறிவோமென்றும், எல்லாக் கட்சிகளும் இந்த இயக்கத்தில் சேர வேண்டுமென்றும், அதனால் தத்தம் அரசியல் கருத்துக்களை மாற்றிக்கொண்டுவிட்டதாக அர்த்தமில்லையென்றும், இந்த வாரத்தில் நடைபெறும் இதுபோன்ற கூட்டங்களில் சர்வகட்சியினரும் பரஸ்பரம் சுமுகமாகவும் ஒற்றுமையாகவும் இருந்து ஒத்துழைக்க வேண்டுமென்றும், சகலரும் சேர்ந்து நின்று வருகிற 22-ம் தேதியன்று மிகப்பெரிய சக்தியைத் திரட்டி ஆர்ப்பாட்டம் நடத்தி, சர்வகட்சிக் குழுவின் கோரிக்கைக்கு சர்க்காரைப் பணியவைக்க முன்வர வேண்டுமென்றும் பலத்த கரகோஷத்திற்கிடையே வேண்டுகோள் விடுத்தார்.

#### மணலி கந்தசாமி

கம்யூனிஸ்ட் தலைவர் மணலி கந்தசாமி பேசுகையில், "அணைகளும் ஆலைகளும் கட்டி முடித்த பிறகு 8 அணா அரிசி ரூ. 1-6-0 ஆகிவிட்டதென்றும், அணைகளைப் பார் என்று காமராஜர் சொன்னால் எங்கள் வயிறுகளைப் பார் என்று குப்பனும் சுப்பியும் சொல்லுகிறார்கள் என்றும், கொள்ளை லாபக்காரர்களும் மடாதிபதிகளும் காங்கிரஸ் மந்திரிகளை ஆட்டிப்படைக்கிறார்களென்றும் சுதந்திரக் கட்சி ஒரு பொறுப்பான கட்சியாக இருக்குமேயானால், 3½ கோடி தமிழ் மக்களின் வாழ்க்கையைப் பாதிக்கும் உணவுப் பிரச்சினையில் ராஜாஜி யார் பக்கம் நிற்கிறார் என்பது தெரிய வேண்டுமென்றும், ராஜாஜி 'வியாபாரிகள் தம் இஷ்டம் போல் எவ்வளவு விலையும் வைத்து விற்க சுதந்திரம் கேட்பவர் என்றும், 22-ம் தேதி அணிவகுப்பு சகல கட்சிக் கொடிகளுடன் பிரம்மாண்டமானதாக இருக்க வேண்டுமென்றும் கூறினார்.

#### பாண்டியன்

புரட்சிகர சோஷலிஸ்டுக் கட்சியின் சார்பாக திரு என். எஸ். பாண்டியன்பேசினார். அவர் பேசும்பொழுது "சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம், வெறும் சோற்றிற்கோ வந்ததிந்தப் பஞ்சம் என்று மக்களது உள்ளங்கள் குமுறிக்கொண்டிருப்பதால் தான் இந்த இயக்கத்தை நடத்துகிறோம்' என்று பேசினார்.

#### இதயவேந்தன்

தமிழரசுக் கழகம் சார்பாக திரு. இதயவேந்தன் பேசினார். அவர் பேசுகையில், "அண்மையில் ஹைதராபாத்தில் நடைபெற்ற அகில இந்திய உணவு தானிய வர்த்தக மாநாட்டில் பேசிய ஒருவர் தங்கம், கரன்சி நோட்டுக்களையெல்லாம் கள்ளக் கடத்தல்-செய்யும்பொழுது, ஏன் அரிசியை கள்ளக் கடத்தல் செய்யக் கூடாது என்று கேட்டார். அத்தகையவர்கள் மீது அரசாங்கம் நடவடிக்கை எடுக்க மறுக்கிறது. அதனால்தான் விலைவாசி உயர்ந்து கொண்டே போகிறது என்றார்.

#### சி. கிருஷ்ணன்

தமிழ்நாடு சோஷலிஸ்ட் கட்சி திரு. சி. கிருஷ்ணன் பேசுகையில், "கேரளத்திற்கு தமிழ் நாட்டிலிருந்து அரிசி போவதால், அரிசி விலை உயர்ந்து வருவதாகக் கூறுவது சரியல்லவென்றும், 1957 முதல் 1959ம் வருடம்வரை பார்த்தால், கேரளத்திற்குச் சென்ற அரிசி குறைந்து கொண்டே வந்திருப்பதையும், சென்ற மாதம் 12ந் தேதி சென்னை ராஜ்ய முதலமைச்சரிடமும் உணவு அமைச்சரிடமும் சமர்ப்பிக்கப்பட்ட சர்வகட்சி உணவு மகஜரில் 1939, 1958, 1959 ஆகஸ்ட் விலைவாசிகள் புள்ளி குறிப்பிடப்பட்டிருப்பதை ஆட்சியாளர் கவனித்து இன்றைய விலைவாசிகளின் உயர்வை மறைக்க, நியாயவிலையில் மக்களுக்கு உணவுப் பண்டங்கள் கிடைக்க உடனடி நடவடிக்கை எடுக்கவேண்டும், என்று வற்புறுத்தினார்.

#### கலைமணி

நாம் தமிழர் இயக்க திரு. நா. வ. கலைமணி "தீர்மானம் போடுவதாலோ, கூட்டங்கள் போடுவதாலோ அரசாங்கம் பிரச்சினையைக் கவனிக்காது. போராட்டம் என்ற அடுத்த கட்டத்திற்குப் போகவேண்டு"மென்றார்.

#### எம். லஜபதி

புரட்சிகர தொழிலாளர் கட்சிப் பிரதிநிதி திரு எம். லஜபதி பேசுகையில், "உற்பத்தி அதிகமானால் விலைவாசி குறையும் என்று கூறுகிறார்கள். ஆனால் இங்கோ உற்பத்தியும் பெருகுகிறது; விலைவாசியும் உயருகிறது. இதற்கு அரசாங்கத்தின் உணவுக் கொள்கை தான் காரணம்" என்று விளக்கிப் பேசினார்.

## பிற்போக்கு சக்திகளை முறியடிக்க மத்ய நிர்வாகக் குழு வழிவகுக்க வேண்டும்

### இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசீய கவுன்சில் வேண்டுகோள்

#### மகாராஷ்டிர, குஜரத் மக்களை வாழ்த்தி கவுன்சில் தீர்மானம்

மீரத், நவ. 16—

இந்த நாட்டிலுள்ள வலதுசாரி பிற்போக்கு சக்திகளை எதிர்த்துப் போராடி முறியடிப்பதற்கான கொள்கையை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் குழு வகுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசீயக் கவுன்சில் கூட்டம் நேற்று முடிவடைந்தது.

இன்றைய அரசியல் நிலைமை குறித்து தோழர் பசவ புன்னையா நீண்டதொரு அறிக்கை சமர்ப்பித்தார். கட்சிக்கு முன்னாலுள்ள பணிகள் பற்றி 4 மணி நேரம் விவாதம் நடைபெற்றது. தோழர் பசவபுன்னையாவின் அறிக்கையின்மீது தோழர்கள் இ. எம். எஸ். நம்பூதிரிபாட், பூபேஷ்குப்தா, பி. சி. ஜோஷி, பி. டி. ரணதிவே, ஹஜ்ராபேகம் ஆகியோர் உட்பட பலர் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்தனர்.

எல்லா ஜனநாயக சக்திகளிடமிருந்தும் பிற்போக்கு சக்திகளைத் தனிமைப்படுத்துவதற்கு கட்சி மேற்கொள்ளவேண்டிய வழிமுறைகளை வரையறுப்பதற்காக மத்திய நிர்வாகக் குழு எவ்வளவு விரைவில் கூடமுடியுமோ அவ்வளவு விரைவில்கூட வேண்டுமென்று கவுன்சில் கேட்டுக் கொண்டது.

அறிக்கையின்மீது பேசிய தோழர்கள் பி. சோ. கட்சியில் ஏற்பட்டுள்ள சீர்குலைவு, அக்கட்சியின் இந்திய வெளிநாட்டுக் கொள்கை எதிர்ப்பு, கிருஷ்ண மேனன்மீது குறைகூறுதல். ஜெனரல் திம்மையாவின் ராஜினாமா பயமுறுத்தல் ஆகிய சம்பவங்களின்மீது அபிப்பிராயம் தெரிவித்தார்கள்.

சுதந்திரக் கட்சியின் தோற்றம் வலது சாரி சக்தி தலைதூக்கியிருக்கிறது என்பதைக் காட்டுகிறது என்ற கருத்தையும் பிற்போக்கு சக்திகளுடன் காங்கிரஸ் கூட்டுச்சேருவதால் ஏற்படுகின்ற விளைவையும் கவுன்சில் கூட்டத்தில் பேசியவர்கள் சுட்டிக்காட்டினார்கள்.

#### மகாராஷ்ட்ர, குஜராத் மக்களுக்கு வாழ்த்து

இரு மொழி மாநிலமாகவிருக்கின்ற பம்பாய் மாநிலத்தை மொழிவழியில் இரண்டு மாநிலங்களாகப் பிரிப்பதற்காகப் போராடிய மகாராஷ்ட்டிர மக்களையும், குஜராத் மக்களையும் வாழ்த்தி கவுன்சில் ஒரு தீர்மானம் நிறைவேற்றி இருக்கிறது.

அத் தீர்மானத்தில் "இரு மொழி மாநிலமாக விருக்கின்ற இன்றைய பம்பாய் மாநிலத்தை மொழிவழி மாநிலமாக அமைப்பதற்கும், அங்ஙனம் அமைக்குமாறு காங்கிரஸ் தலைமைப் பீடத்தை ஆக்கியதற்கும் சம்யுக்த மகாராஷ்ட்டிர மக்களையும், மகாகுஜரத் மக்களையும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தேசீய கவுன்சில் வாழ்த்துகிறது. இது மகாராஷ்ட்டிர, குஜராத் மக்களின் வீரம் செறிந்த போராட்டத்தால் கிடைத்த பெருமித வெற்றியாகும். இரு மொழி மாநிலத்தை அநியாயமாகச் சுமத்திய காங்கிரசின் ஜனநாயக விரோதகொள்கைக்குக்கிடைத்த தோல்வியாகும்."

"இவ்வெற்றிகரமான போராட்டத்தில் உயிரிழந்த உத்தமத் தியாகிகளுக்கு தேசியக் கவுன்சில் அஞ்சலி செலுத்துகிறது. சம்யுக்த மகாராஷ்ட்டிர சமிதியையும், மகா குஜராத் ஜனதா பரிஷத் என்ற மக்களின் செல்வாக்கு வாய்ந்த ஸ்தாபனங்களை மகாராஷ்ட்டிர, குஜராத் மக்கள் மேலும் பலப்படுத்தி, எல்லை விஷயத்தில் சுமுகமான தீர்வு காண வேண்டும். மற்ற பிரச்சினைகளை நேசபூர்வமாக சகோதர உணர்வோடு தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறது" என்று கூறுகிறது. இப்போராட்டத்தில் பங்கெடுத்து திருப்திகரமான முறையில் பணியாற்றிய கம்யூனிஸ்ட் கட்சியின் கிளைகளையும் தீர்மானம் பாராட்டியுள்ளது.

கண்களுக்கும் செவிகளுக்கும் அதி அற்புத கலை விருந்து!
நீங்கள் இதுவரை பார்த்திராத பிரம்மாண்ட காட்சி!
சென்னை நாட்டிய சங்கம்
அளிக்கும்
ஜெர்மன் ஜனநாயகக் குடியரசுக்
கலைஞர்களின் (கிழக்கு ஜெர்மனி)
நாடோடி ஜனங்களும்
இன்னிசை விழாவும்
நவம்பர் 17, 18 தேதிகளில்
அண்ணாமலை மன்றத்தில்
இரவு 7 மணிக்கு
டிக்கெட்டுகள் கிடைக்குமிடம்:—
1. மகமத் இபராகிம் & கோ., சென்னை-2
2. ஒய். எம். சி. ஏ. எஸபிளனேட், சென்னை-1.
3. மவுலீஸ அட்வர்டைசிங் சர்வீஸ், 193 மவுண்டு ரோடு, சென்னை-2.

## தென் வியத்நாமில் மேலும் அமெரிக்க ராணுவத் தளங்கள்!

### ராணுவ முகாம்களில் வேலைசெய்ய மக்களை நிர்ப்பந்தப்படுத்தும் அநீதி

பாரிஸ், நவ. 14—

லாவோஸ், கம்போடியா எல்லையில் தென்வியத்நாமில் அமெரிக்கா மேலும் பல இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த பாதைகளை அமைத்து, இராணுவ தளங்களை நிறுவிவருகிறது. அதனால் கம்போடியா, லாவோஸ், வடவியத்நாம் ஆகிய நாடுகளின் சமாதானத்திற்கு மேலும் அபாய நிலைமை அதிகரித்துவருகிறது.

உயர்ந்த பீடபூமிகளில் இராணுவ தளங்களை உருவாக்குவதற்காக இவ்வாண்டு மேலும் 39 "குடியேற்ற முகாம்"களை ஏற்படுத்த அமெரிக்காவும்-தென் வியத்நாமும் கூட்டாகத் திட்டமிட்டுள்ளன. இம்முகாம்களையும் சேர்த்து தென் வியத்நாமில் மொத்தம் 118 முகாம்கள் இருக்கின்றன. மத்திய வியத்நாமில் டெல்டாப் பகுதிகளில் வாழும் மக்கள் இம்முகாம்களில் வேலை செய்வதற்காக பலவந்தமாகக் கொண்டு செல்லப்படுகிறார்கள். இச்செய்தியை பிரான்சிலிருந்து வெளியாகும் 'டி எக்ஸ்ட்ரீம்' என்ற செய்தித்தாள் வெளியிட்டிருக்கிறது.

## அசாமில் 11 அடி நீள மனித எலும்புக்கூடு

கௌஹாத்தி, நவ. 15—

11 அடி நீளமுள்ள மனித எலும்புக்கூடு ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. தூராவில் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட கல்லூரிக்காக காரோ மலையில் கட்டப்படும் கட்டிடத்திற்கு பள்ளம் தோண்டியபோது இந்த எலும்புக் கூடு கண்டுபிடிக்கப் பட்டது. அந்தக் கல்லூரியின் காரியதரிசி இத்தகவலைத் தெரிவித்தார்.

இந்த எலும்புக் கூட்டின்விரல் எலும்பானது சாதாரண மனிதனின் கை எலும்பு அளவு பருமனுள்ளதாக இருக்கிறது என்று அந்தக் கல்லூரி காரியதரிசி கூறுகிறார்.

இந்த எலும்புக் கூடு ஒரு கல்லறையினுள் இருந்தது.

அதன் அருகில் சிறிது அடுப்புக் கரித்துண்டுகளும் இருந்தன. பூமி மட்டத்திற்கு சுமார் 4 அடிக்குக் கீழ் புதைக்கப்பட்டிருந்த இந்த எலும்புக் கூட்டின் தலை கிழக்குத் திக்கை நோக்கி இருந்தது.

## காங்கிரஸ் எம். பி. தேர்தல் செல்லாது

ரெய்ச்சூர், நவ. 15—

அகாடி சங்கண்ணா என்ற காங்கிரஸ் எம். பி.யின் தேர்தல் செல்லுபடியாகாது என்று தேர்தல் மன்றம் முடிவு செய்தது.

எஸ். ஆல்வந்தி எம். எல். ஏ. யின் தேர்தலும் செல்லாதென்று முடிவு செய்யப்பட்டு, அவருக்குப் பதில் மனுதாரர் வீரபத்திர சிருர் ராஜ்ய சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதாக தேர்தல் மன்றம் முடிவுசெய்தது.

## நேபாள பிரதமர் இந்தியா வருகை

புதுடெல்லி, நவ. 15—

நேபாள முதன் மந்திரி பி.பி. கொய்ராலா, இந்திய அரசாங்கத்தின் அழைப்பிற்கிணங்க, டிசம்பர் கடைசியிலோ, ஜனவரி முதலிலோ இந்தியாவுக்கு விஜயம் செய்வார் என்று விஷயமறிந்த வட்டாரங்களில் கூறப்படுகின்றது.

கொய்ராலா இரண்டு அல்லது மூன்று வாரங்கள் இந்தியாவில் தங்குவார் என்றும் நேருவையும் இதர தலைவர்களையும் சந்திப்பார் என்று, இந்தியாவின் தொழில் வளர்ச்சியை அறிந்துகொள்ள இச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்வார் என்றும் கூறப்படுகிறது.

## கிழக்கு ஜெர்மன் கலைக் குழுவினர்

சென்னை, நவ. 15—

கிழக்கு ஜெர்மன் (ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின்) கலாசாரத் தூதுக்குழுவினர் இன்று பிற்பகலில் விமானமூலம் ஹைதராபாத்திலிருந்து இங்கு வந்து சேர்ந்தனர். விமான நிலையத்தில் சென்னை நாட்டிய சங்கத்தின் சார்பில் அவர்களுக்கு வரவேற்புக் கொடுக்கப்பட்டது.

இக் குழுவினர் ஏற்கனவே புதுடில்லி, பம்பாய், கல்கத்தா ஹைதராபாத் ஆகிய இடங்களில் கலைநிகழ்ச்சிகள் நடத்தியுள்ளனர். சென்னை நகரத்தில் நவ. 17, 18 தேதிகளில் அண்ணாமலை மன்றத்தில் இரு கலைநிகழ்ச்சிகளை நடத்துவர்.

## இந்துமகா சமுத்திரத்தில் பூதத்துவ ஆராய்ச்சி

### சோவியத் விஞ்ஞானிகள் நடத்துகின்றனர்

பம்பாய, நவ. 15—

இந்துமகா சமுத்திரத்தில் பூதத்துவ ஆராய்ச்சி நடத்திவரும் சோவியத் விஞ்ஞானிகள் கோஷ்டியினர் அடுத்த மாதத் துவக்கத்தில் பம்பாய்க்கு வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 'விட்யாஸ்' என்ற கப்பலில் சென்று இந்த ஆராய்ச்சி நடத்தி வருகிறார்கள்.

இந்த விஞ்ஞானிகள் சேகரிக்கும் தகவல்களை இந்திய விஞ்ஞானிகளுக்கும் சர்க்காருக்கும் கொடுத்து உதவுவார்கள். 'வித்யாஸ்' என்னும் கப்பலே ஒரு மிதக்கும் சோதனைக் கூடம்.

இதில் 20 ஆயிரம் அடி ஆழம் வரைப் போட்டோ படங்கள் எடுக்கத் தக்க காமிராக்கள் பொருத்தப்பட்டுள்ளன. மண்ணின் தரம் தன்மை வண்டல் குவிப்பு இவை பற்றிய விபரமும் திரட்டப்பட்டு வருகிறது.

ஆறுமாத காலத்திற்குள் இந்தக் கப்பல் 25 ஆயிரம் மைல்கள் பயணம் செய்து ஆராய்ச்சியை நடத்தும்.

34 ஆயிரம் அடிக்குக் கீழ் நீர்ப்புழுக்கள் போன்ற ஜீவன்கள் இருப்பதாகத் தெரிகிறது. அதாவது இத்தனை ஆழத்தில் கூட உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத பிராணவாயு இருப்பது புலனாகிறது.

இந்த ஆராய்ச்சிக் குழுவுக்கு சோவியத் விஞ்ஞானக் கழகப் பிரமுகர் டாக்டர் வி. போகரோவ் தலைமை தாங்குகிறார்.

## உலக உணவு பாங்க்

### யூனியன் உணவு மந்திரியின் புதிய திட்டம்

பம்பாய், நவ. 15—

உலக முழுவதிலும் உணவுப் பிரச்சினைக்குத் தீர்வு காண உலக உணவு பாங்க் ஒன்றை நிறுவ வேண்டும்என இந்தியாவிரும்புவதாக யூனியன் உணவுத் துறை அமைச்சர் எஸ். கே. படீல் இன்று கூறினார்.

ரோமில் நடைபெற்ற உணவு மாநாட்டில் கலந்துகொண்டபின் அவர் ஐரோப்பாவில் சுற்றுப்பயணம் செய்தார். இன்று இந்திய திரும்பிய அவருக்கு பம்பாய் பிரதேச காங்கிரஸ் நடத்திய உபசாரக் கூட்டமொன்றில் பேசுகையிலேயே மேற்கண்டவாறு படீல் கூறினார்.

உணவு பாங்க் நிறுவும் கருத்தைப் படீல் வெளியிட்டபொழுது உலக நாடுகள் பலவும் ஆதரித்ததாகவும் அவர் கூறினார். உணவு உற்பத்தியில் உபரி நாடுகளான அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா, அர்ஜெண்டைனா முதலியநாடுகளின் பிரச்சினைகளையும் அதே சமயத்தில் பற்றாக் குறை நாடுகளின் பிரச்சினைகளையும் இத்திட்டம் தீர்க்கும் என படீல் நம்பிக்கை தெவித்தார்.

## லூனிக்கிலுள்ள ரேடியோ இயங்கவில்லை

மாஸ்கோ, நவ. 15—

அண்மையில் சோவியத் யூனியன் செலுத்திய லூனிக்கிலுள்ள வானொலியின் இயக்கம் தடைப்பட்டுள்ளது. லூனிக் எரிநட்சத்திரம் ஒன்றுடன் மோதியதாலேயே அவ்வானொலியின் இயக்கம் நின்றிருக்கக் கூடுமென்று சோவியத் விஞ்ஞானிகள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

கடைசியாக அக்டோபர் 4-ம் நாள் சோவியத் யூனியன் லூனிக்கைச் செலுத்தியதும், அந்த லூனிக் சந்திரனைப் படம்பிடித்து அனுப்பியதும் வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

## எங்குமே சீன ஊடுருவல் இல்லை

### பூடான்வாசிகள் கருத்து

சிலிகுரி, நவ. 15—

பூடான் தேசத்தில் எந்தப் பகுதியிலும் சீனா ஊடுருவவில்லை என்று இந்தியாவில் சுற்றுப்பயணம் நடத்திவரும் 100 பூடான் வாசிகளின் தலைவர் கொம்புதுர்ஜி துக்லா கூறினார். மத்திய சர்க்கார் அழைப்பை ஏற்று இவர்கள் இந்தியாவில் சுற்றுப் பயணம் நடத்துகிறார்கள். இந்தக் குழுவைச் சேர்ந்த மற்றவர்களும் இதே கருத்தை ஊர்ஜிதம் செய்தார்கள். இந்தக் குழுவில் கலைஞர்கள், தொழில் நுட்பக் கலைஞர்கள் சாமியார்கள் பலவகையினர் உள்ளனர்.

## கரம்சிங் கோஷ்டியினர் விரைவில் ஸ்ரீநகர் சேர்வர்

ஸ்ரீநகர், நவ. 15—

இந்தியப் போலீஸிடம் சீன எல்லைப் படையினர் ஒப்படைத்த போலீஸ் அதிகாரி கரம்சிங், இப்பொழுது பிரயாணமொன்றை மேற்கொள்ளும் நிலையில் இல்லை என அறிவிக்கப்பட்டுள்ளது. அவரது கைகளும் கால்களும் பனியால் மரத்துப் போயிருக்கின்றன. இன்னும் சில நாட்களில் அவர் குணமடைந்து விடுவாரெனவும் அதன் பிறகு இதர போலீஸாருடன் அவர் ஸ்ரீநகர் கொண்டுவரப்படுவார் எனவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

CHOCOLATE
TRULEX
LAXATIVE

T. T. C.,
Trichy Tutorial College
(Madurai, Coimbatore & Tiruchy.)
Famous for forecasts. Results consistently above 90%
CLASSES FOR P. U. C. COMMENCE
From 16—11—1959.
Tuition: ORAL & POSTAL.
*Hostel and Laboratory Attached.*
RUSH IN BEFORE ADMISSIONS CLOSE.
P. N. RAMAN, B.A., (Hons.), L.T.,
*Principal.*
Madurai Office:—
Hamidia Buildings, 59, Town Hall Road, Madurai.
Tiruchy Office:—
Theodore Buildings, P. B. No. 330, Teppakulam P.O. Tiruchy
Coimbatore Office:—
7/47, State Bank Road, Opp. Railway Station, Coimbatore.

ஜனசக்தி

சென்னை 17-11-1959

# எமது வாழ்த்துக்கள்

எழுபதாவது ஆண்டை எய்தியிருக்கின்ற இந்தியப் பிரதமர் நேருவிற்கு நமது இதயபூர்வமான, உள்ளம் கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்தியா விடுதலை பெறுவதற்காக அவர் ஆற்றிய அரும் பணியையும், உலக சமாதான இலட்சியத்திற்காக அவர் ஆற்றிவரும் பெரும் சேவைகளையும் மீண்டும் பாராட்டுகிறோம்.

ஆசிய ஆப்பிரிக்க நாடுகளிடையே நட்புறவு வளர்வதற்காகவும், பல்வேறு சமூக அரசியல் அமைப்புக்களைக் கொண்ட நாடுகளிடையே பரஸ்பர சகோதர ஒத்துழைப்பு ஏற்படுவதற்காகவும் அவர் பெருமுயற்சிஎடுத்தார்.

அத்துடன் சீனத்துடன் சேர்ந்து நின்று பஞ்ச சீலக் கொள்கையை உலகிற்கு வழங்கி இந்தியாவின் புகழை ஏற்றிப் பிடித்தார். அல்ஜீரியாவிற்கு விடுதலை, சீனத்திற்கு ஐ. நா. வில் இடமளித்தல், விடுதலைக்காகத் துடிக்கும் காலனி நாடுகளுக்கு ஆதரவு, அணுகுண்டுத்தடை, படைபலக் குறைப்பு போன்ற சர்வதேசப் பிரச்சினைகளில் நேருநல்லதொரு கொள்கையையே கடைப்பிடித்து வருவதை உலகம் போற்றுகிறது.

இந்தியா நடுநிலைமைக் கொள்கையினின்றும் பிறழாது, எந்த ராணுவக்கூட்டணியிலும் அங்கம் பெறாது. உலகில் கெடுபிடிப் போரை உண்டாக்கும் ராணுவக் கூட்டணிகளையே வெறுக்கிறோம் என்று பறைசாற்றியுள்ளார்.

இங்ஙனம் உலக சமாதானத்திற்காகப் பாடுபடும் நமது பிரதமர், பஞ்சசீலக் கொள்கையை வகுத்தவர் அக்கொள்கையின் அடிப்படையிலேயே நமது எல்லா அண்டை நாடுகளுடனும் உறவைவளர்த்துக்கொள்வதற்கு மேலும் முயற்சி எடுத்துக் கொள்வார் என்று நம்புகிறோம்.

பஞ்சசீலக் கொள்கைக்கு விரோதமாக, இந்தியாவை ஏகாதிபத்தியக்கூட்டணியில் தள்ளிவிட முயற்சிக்கும் பிற்போக்காளர்களை எதிர்த்துப் போராடும் முற்போக்கு வாதிகளின் கரத்தை பலப்படுத்துவார் என்று நம்புகிறோம்.

இந்தியப் பிற்போக்காளர்களின் எக்காளத்தைஅடக்கி, நடுநிலைமைக் கொள்கையில் உறுதியாக நின்று இந்தியாவின் புகழை மேலும் உயர்த்திப் பிடிப்பார் என்று நம்புவோமாக! சோஷலிஸமே நமது நாட்டின் இன்னல்களுக்கு நல்ல மருந்து என்று மீண்டும் மீண்டும் வற்புறுத்திவரும் பிரதமர் சோஷலிஸ விரோத சக்திகளை உறுதியுடன் எதிர்த்துப் போராடுவார் என்று நம்புவோமாக! நேரு பல்லாண்டுகள் வாழ்ந்து உலக சமாதானமும், ஜனநாயகமும், சோஷலிஸமும் வெற்றிபெற அரும்பெரும் பணியாற்ற வேண்டுமென்று வாழ்த்துகிறோம்.

## குழந்தைகள் பாதுகாப்பு

பிரதமர் நேருவின் பிறந்த தினத்தையே குழந்தைகள் பாதுகாப்பு தினமாக இந்திய நாட்டில் கொண்டாடப்படுகிறது.

அரசாங்க மட்டத்திலும், அதிகார சார்பில்லாத இன்னும் பலராலும் இத்தினம் கொண்டாடப்படுகிறது.

குழந்தைகள் நமது எதிர்காலத்தின் மிக உயர்ந்த, உன்னத சம்பத்து என்பதை உணர்ந்து, அவர்களைப் பாதுகாக்க சகல நடவடிக்கைகளும் எடுக்கவேண்டும் என்ற உணர்வை இத்தினம் உண்டாக்குகிறது. வரவேற்கத்தக்கதுதான்.

குழந்தைகள் தினத்தைக் கொண்டாடும் ஆளும் கட்சியைச்சேர்ந்த தலைவர்களிடம் இத்தினத்தில் ஒருசில கேள்விகள் கேட்பது அவசியமாகிறது.

"குழந்தைகளே! நீங்கள் சௌக்கியமாக, சுத்தமாக, நீண்ட ஆயுள்பெற்று வாழ்வீராக" என்று பிரார்த்தனை நடத்துவதுதான் குழந்தைகள் தினக்கொண்டாட்டமா? அவர்கள் உண்மையில் நமது நாட்டின் சிறந்த எதிர்காலப் பிரஜைகளாக வளர ஆவன செய்வது நோக்கமா?

எதிர்காலத்தில் நல்ல மனிதர்களாக விளங்கவேண்டும் என்பதே நோக்கமானால், பள்ளிக்கூடங்களில் பலர் குழந்தைகள் விழாக் கொண்டாடுவது மட்டும் போதாது; அவர்கள் பிறந்த அகங்களிலும் நிம்மதியும் இன்பமும் பொங்க வேண்டும், படிஅரிசி 1½ ரூபாய் விற்றால், ஏழை நடுத்தரக் குடும்பங்களில் எவ்வாறு நிம்மதி நிலவும்? இன்பம் பொங்கும்? 100க்கு 80 சதவிகிதத்திற்கு மேற்பட்ட குடும்பங்களின் நிலை இதுதானே?

மத்தியான உணவு எல்லா குழந்தைகளுக்கும் இலவசமாகக் கிடைக்கச் செய்ய வேண்டும் என்று காங்கிரஸ் திட்டம் ஒன்று கூறுகிறது. கிடைக்குமா? தேர்தல் பிரச்சாரத்திற்கு இது பயன்படலாம். ஆனால் நடைமுறையில் இதைக் காணுவதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

மதியம் உணவு தருவதற்கே ஏற்பாடு செய்யப்படுகிறது என்றே வைத்துக்கொள்வோம். குழந்தைகளின் செம்மையான வளர்ச்சிக்கு இது போதுமா? மற்ற இரண்டு வேளைகளிலும் அந்தக் குழந்தைக்கு உணவும் பாலும் தந்து, இருந்து படிப்பதற்கு வசதியான இருப்பிடமும் இருக்கும் சூழ்நிலையை உருவாக்கவில்லை என்றால், குழந்தைகள் பராமரிப்பு குறித்துப் பேசுவதில் பயனுண்டா?

11 வயது வரையிலும் கட்டாய இலவசப்படிப்பு அளிக்க வேண்டும் என்பது உதகையில் தீட்டப்பட்ட காங்கிரஸ் திட்டத்தில் ஒன்று. முதலமைச்சர் திரு. காமராஜகூட 11-வது வரையில் இலவசப் படிப்பு எல்லோருக்கும் கிடைக்கச் செய்ய வேண்டுமென்றார். வரவேற்கத்தக்க ஆலோசனைகள்தாம்.

இன்று நிலைமை என்ன? இலவசப் படிப்பு இருக்கட்டும். குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்க முடியாமல் திண்டாடும் தாய் தந்தையர்தானே அதிகமாக உள்ளனர்? போதிய பள்ளிகள், போதிய ஆசிரியர்கள், இதற்காகத் தேவையான திட்டத்துடன் செலவு செய்ய முன்வராத ஆட்சியாளர் வாய்ப்பந்தல் போடுவது ஏன்?

இந்திரா காந்தி அனாதைக் குழந்தைகளுக்காகக் குடம் குடமாகக் கண்ணீர் வடித்தார். "அனாதை" என்ற நிலைமைக்கே காரணம் யார்? பெரும்பாலான குழந்தைகள் தம் தாய் தந்தையரை இழக்கக் காரணம் என்ன? வேலையின்றிப் பட்டினி கிடந்து மடிந்தனர்; போதிய வருவாய் இன்றி வறுமையால் மடிந்தனர்; இன்றைய விலைவாசி உயர்வால் வாழ்க்கை நடத்த முடியாமல் கொஞ்சம் கொஞ்சமாக மடிந்து கொண்டிருக்கின்றனர். அனாதையாவதின் சரித்திரம் இதுதானே!

இத்தகையதொரு சீர்கேட்டை போக்குவது ஆட்சியாளரின் பொறுப்பு; இதை உணராது கண்ணீர் வடித்துப் பயன் யாது?

அனாதைக் குழந்தைகளைப் பாதுகாக்க நடவடிக்கை எடுப்பதுடன், அந்த 'அனாதை' என்ற நிலைமை இல்லாதொழிப்பது அவசியம் என்பதை உணர்ந்தனரா?

அனாதைகளைவிட மிகக் கேவலமான நிலைமையில் ஏழைத் தொழிலாளிகள் விவசாயிகள் குழந்தைகள் நாற்றமெடுக்கும் சேரிகளிலும், அசுத்தமான இடங்களிலும் வாழுகின்றனர். தொத்து நோய்களால் மடிகின்றனர்.

குழந்தை பராமரிப்புப் பற்றிப் பேசும்பொழுது அந்தக் குழந்தைகளைப் பெற்றவர்கள் வாழ்வதற்கு வீடும், வாழுமிடம் சுத்தமாகவும் இருக்க வேண்டுமென்பதைப் பற்றிச் சிந்தித்ததுண்டா?

குழந்தைகளுக்கு இலவசக் கல்வியும், மதிய உணவும், சுகாதார பாதுகாப்பும் தர சகல நடவடிக்கை எடுப்பதுடன் அந்தக் குழந்தைகளின் பெற்றோரின் அதாவது ஏழை நடுத்தர மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகளையும் தீர்க்க வேண்டிய அவசியத்தை உணர வேண்டுமென்பதே நாம் வற்புறுத்திக் கூற விரும்புவது.

# காங்கிரசை நோக்கி பி. சோ. கட்சி பயணம்

[ இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் ]

**"பி. சோ. கட்சியின் வெள்ளி விழாவுக்கு, பி. சோ. கட்சி உறுப்பினர்களை மட்டுமல்ல, காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி ஆரம்பகர்த்தாக்களையும் அழைத்துள்ளார்களே, உங்களையும் அவர்கள் அழைத்துள்ளார்களா?" என்று என்னுடைய நண்பர் ஒருவர் என்னிடம் கேட்டார். அப்படிப்பட்ட அழைப்பு எதுவும் எனக்கு வரும் என்று நான் எண்ணவில்லை. ஏனெனில், பி. சோ. தலைவர்கள் அவர்கள் அனுஷ்டித்துவரும் கொள்கைகளுக்கு விரோதமாகச் செயல்படுபவன் நான் என்று கருதுகிறார்கள். அதே போன்று நாங்கள் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் எந்த ஒரு லட்சியத்திற்காக ஒன்றுபட்டோமோ, எதற்காக காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியை ஆரம்பித்தோமோ, அந்த லட்சியத்திற்காக பி. சோ. கட்சித் தலைவர்கள் நிற்கவில்லை என்று நான் கருதுகிறேன்.**

**1934-ம்** ஆண்டு மே மாதம் சோஷலிஸலட்சியத்தில் நம்பிக்கை கொண்ட காங்கிரஸ்காரர்கள் பாட்னாவில் கூடினோம். அந்த தயாரிப்பு மகாநாட்டிற்கு ஆச்சாரிய நாரேந்திரதேவ் தலைமை தாங்கினார்.

காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி அமைப்பதற்கான நகல் கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

அதை ஒட்டி 1934 அக்டோபர் மாதம் இப்போது உத்தரப் பிரதேச முதன் மந்திரியாக இருக்கும் திரு. சம்பூரணானந்த் தலைமையில் காங்கிரஸ் சோஷலிஸ்ட் மகாநாடு நடைபெற்றது. அப்போது ஆரம்பிக்கப்பட்ட காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சிக் காரியதரிசிகளில் ஒருவனாக நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன். திரு. மசானி, திரு. மோகன்லால் கௌதம், திரு. என். ஜி. கோரே ஆகியவர்கள் கூட்டுக் காரியதரிசிகளாகச் செயல்பட்டார்கள்.

1940ம் ஆண்டு நானும்கேரளத்திலுள்ள எனது சக தோழர்களும், அந்தக் கட்சியை விட்டு விலகும் வரையில் காரியதரிசி பதவியை நான் வகித்து வந்தேன்.

அந்தக் காலத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போரிட்ட ஆயிரக்கணக்கான மக்களை இக்கட்சி விஞ்ஞான சோஷலிஸ பாதையில் திருப்பிற்று என்று பெருமையுடன் சொல்லிக்கொள்ள நான் ஆசைப்படுகிறேன்.

1959 அக்டோபர் 25-ம் தேதி 'ஜனதா' பத்திரிகை ஆசிரியர் எழுதியுள்ள கட்டுரையில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். அதாவது "1939-ம் வருஷம் நாங்கள் சோஷலிஸ லட்சியத்தைக் கடைப்பிடித்தோம். ஏனெனில் தேசிய இயக்கம் புதிய லட்சியத்தை ஏற்றுக்கொள்ளவில்லை எனில் பாட்டாளி வர்க்கத்தைத் தன் அணியில் சேர்த்துக் கொள்ள முடியாது. எனவே, சோஷலிஸ லட்சியத்தை ஏற்றுக்கொண்டால்தான் தேசிய இயக்கம் முழுமையடையும் என்று நாங்கள் எண்ணினோம்" உண்மை. இது முற்றிலும் சரியே என்று நான் ஒத்துக் கொள்ளுகிறேன்.

### ஜெயப்பிரகாஷ்

திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் முதன் முதலாக கேரளத்திற்கு விஜயம் செய்தபோது தனது பிரசங்கங்களில் சோஷலிஸம்தான் நமது லட்சியம் என்று மட்டுமல்ல, தேசிய இயக்க உணர்வை மக்கள் மனதில் பதிய வைப்பதற்கான ஒரே வழி என்று முழங்கினார். சோஷலிஸ லட்சியத்திற்கு விரோதமாக வந்தபல்வேறு தவறான வாதப் பிரதிவாதங்களுக்கு "சோஷலிஸம் எதற்கு?" என்று அவர் எழுதிய புத்தகத்தில் ஆணித்தரமாகப் பதிலளித்துள்ளார்.

தீவிர காங்கிரஸ்வாதிகளுக்கு நவீன விஞ்ஞான சோஷலிஸ முறையில் போதமேற்பட அது உதவிற்று.

இதர மாகாணங்களில் உள்ள என்னுடைய சகாக்களில் பலரும், என்னுடைய மாகாணத்தில் உள்ள ஏகதேசம், எல்லாத் தோழர்களும் சோஷலிஸ லட்சியத்திற்காக உழைத்ததோடுமட்டுமல்லாமல் அதையே வழிகாட்டியாகவும் லட்சிய நோக்கமாகவும் ஏற்றுக்கொண்டோம். அன்று ஏற்பட்ட 'சோஷலிஸஉணர்வு' எங்களைவிட்டுப் போய்விடவில்லை; மாறாக, நாங்கள் அந்த லட்சியத்தை உறுதியாகக் கடைப்பிடித்து, மேலும் வலியுறுத்தி வளர்க்க நாங்கள் பாடுபடுகிறோம் என்று எண்ணி நான் பெருமைப்படுகிறேன்.

### நாங்கள் பிரிந்தோம்

1934-ல் நாங்கள் சோஷலிஸத்தை லட்சியமாக ஏற்றுக் கொண்டோம். அதனால், தான் எங்களுடைய தோழர்களில் பலர் இந்த லட்சியத்தை விட்டு விலகுவதற்கான ஆரம்ப தசையும் அப்போதுதான் தொடங்கிற்று.

உதாரணமாக, இந்த வெள்ளி விழா மகாநாட்டில் எனது பழைய தோழர் என். ஜி. கோரே பேசிய பேச்சை எடுத்துக்கொள்வோம்.

'அன்று நாங்கள் அனைவரும் சுயம்பிரகாச மார்க்சீய உணர்வில் ஊறிப் போயிருந்தோம். நாங்கள் என்ன சொன்னாலும் சரி; மார்க்சீய பதங்களையே உபயோகித்தோம்' என்று கூறி அதற்காக இப்போது அவர் வெட்கப்படுகிறார். மேலும், 'ஜனதா' பத்திரிகையில் வெளிவந்துள்ள வேறு ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருப்பதையும் எடுத்துக்கொள்வோம். அதில், உற்பத்திச் சாதனங்களைத் தேசியமயமாக்க வேண்டும், விநியோகம், பரிவர்த்தனையும் எல்லாம் தேசியமயமாக்கப்படவேண்டும் என்ற லட்சிய நோக்கங்கள் அனைத்தும் பத்தாம் பசலி லட்சியங்களாகி விட்டன, அவை எங்களுக்கு உணர்ச்சியூட்டவில்லை. என்று அந்தக் கட்டுரையில் குறிப்பிடப் பட்டுள்ளது.

இப்போது பழைய நிலைமையையும், இன்றுள்ள நிலைமையையும் தாரதம்மியப்படுத்திப் பார்த்தால் ஜனதா தலையங்கத்தில் குறிப்பிடுவது என்ன? அதாவது 1934ம் வருஷத்தில் தேசிய இயக்கத்திற்கு, பாட்டாளி வர்க்கத்தின் ஆதரவைப் பெறுவதற்கு சோஷலிஸ



உணர்வு தேவைப்பட்டது. புதியதொரு கொள்கையையும் ஏற்றுக் கொண்டு புதுமைப்படுத்தப் படவேண்டியதிருந்தது.

ஆனால், 1959-ல் சோஷலிஸத்தின் மலர்ச்சிக்கு விழிப்புற்ற தேசிய உணர்வின் "ஒத்துழைப்பும்" தேவைப்படுகிறது என்று நம்புகிறார்கள்.

### காங்கிரஸுக்குத் திரும்பிப் போவது

வேறு வகையில் சொல்வோமானால், காங்கிரஸ் கட்சியின் கொள்கையில் அதிருப்தியடைந்த நூற்றுக் கணக்கான காங்கிரஸ்காரர்கள் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி அமைத்த போது சோஷலிசத்தை நோக்கி ஒருபடி முன்னுக்கு வந்தார்கள். அந்தக் கட்சியிலிருந்தவர்கள், அந்தக் கட்சியை இந்திய சோஷலிஸ்ட் கட்சியாக மாற்றினார்கள். அதை பிரஜா சோஷலிஸ்ட் கட்சியாக மாற்றினார்கள். இப்போது 1934ம் வருஷத்தில் அவர்கள் எண்ணத்தில் உதித்த புதிய சிறந்த அம்சங்களை எல்லாம் காற்றில் பறக்கவிட்டுவிட்டு இன்று காங்கிரஸ் கட்சியை நோக்கிப் போகிறார்கள்.

எனவே அவர்களில் மிகவும் முக்கியமான தலைவர்களில் ஒருவர் சுதந்திரக் கட்சியின் மூக்கிய தலைவராக இருப்பதில் ஆச்சரியமொன்றுமில்லை. அடுத்தவர் பூதான இயக்கத்தில் தலைமை தாங்குவதும் ஆச்சரியப்படத்தக்க விஷயமன்று. வேறு சிலர் காங்கிரஸ் மந்திரிகளாக இருப்பதும், மாஜி காங்கிரஸ் மந்திரிகளாக இருந்துவிட்டு, திரும்பவும் மந்திரியாவதற்கு ஆசைப்படுவதும் சந்தர்ப்பவசத்தால் நிகழ்ந்த நிகழ்ச்சிகளல்ல. இந்த சூழ்நிலையில்தான் பி. சோ. கட்சியின் பத்திரிகை அவர்கள் கட்சி ஒரு முழு வட்டம் சுற்றிவிட்டதாகப் பறைசாற்றுகிறது.

இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்பு, நாங்கள் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி அமைத்த போது ஒருமித்து நின்று ஏற்றுக்கொண்ட 'சோஷலிஸ' லட்சியத்தை அவர்கள் புறக்கணித்து விட்டதால் எங்களில் பலர் அவர்களைவிட்டு விலகி வந்துவிட்டோம். எனவே தான் எங்கள் மேல் அவர்களுக்கு அளவு கடந்த கோபமும் ஆத்திரமும்.

1934ம் ஆண்டு, ஏற்பட்ட சோஷலிஸ லட்சிய உணர்வுதான், அதை ஏற்றுக்கொள்வதுதான் சாதாரண ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்களுக்கும், சோஷலிஸ்டுகளுக்கும் ஏற்பட்ட பாகுபாட்டிற்கான முக்கிய காரணம், அந்த லட்சியத்தை இப்போதுள்ள பி. சோ. தலைவர்கள் உதறித் தள்ளியதுதான்; இப்போதுள்ள பி. சோ. கட்சித் தலைவர்களுக்கும் அன்றிருந்த காங்கிரஸ் சோஷலிஸ்டுகளுக்கும் இடையிலுள்ள வேற்றுமை. எனவே தான், காங்கிரஸ் சோஷலிஸ்ட்கள் அவர்களை விட்டுப் பிரிந்து வந்து கம்யூனிஸ்ட் கட்சியில் ஐக்கியமானார்கள்.

இந்த சோஷலிஸ அடிப்படை லட்சியங்கள், வெறும் 'தத்துவார்த்த முக்கியம் வாய்ந்த விஷயங்களல்ல. அவற்றில் மிக முக்கியமான யதார்த்த உண்மைகள் அடங்கியுள்ளன. பி. சோ. கட்சியின் வெள்ளி விழா மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் இவை பிரதிபலிப்பதைப் பார்க்கலாம்.

### பன்னிரண்டு அம்ச திட்டம்

பி. சோ. கட்சியின் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட பன்னிரண்டு அம்சத் திட்டத்தில், நமது நாட்டின் விவசாயப் பெருங்குடி மக்கள்மேல் சுமத்தப்பட்டு அவர்கள் அவதிப்படுகின்ற குத்தகைப்பளு, வரிப்பளு, கடன்பளு ஆகிய மூன்று பளுக்கள்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. மாறாக விவசாயத்துறையைப் பொறுத்தமட்டில் அவர்கள் கூறுவது என்ன?

1. விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்காக் வேண்டி, விவசாயிகள் நல்ல விதை, உரம், விவசாயக் கருவிகள், வாங்குவதற்கும், பண்டகசாலைகள் கட்டுவதற்கும் கடன் உதவிகள் நல்கப் படவேண்டும். அடுத்த ஐந்து ஆண்டு காலத்திற்குள் பாதிக் கிராமங்களுக்கு கூட்டுறவு சங்கங்கள் மூலம் இந்தக் கடன் உதவி செய்யப்பட வேண்டும். மேலும், கூட்டுறவு பண்ணைகள் அமைக்க வேண்டுமென்று முன் வருகின்ற விவசாயிகளுக்கு உதவி நல்கப்பட வேண்டும்.

2. சாகுபடிக்கு லாயக்கான புறம்போக்கு நிலங்கள், நிலமில்லா விவசாயிகளுக்குக் கொடுக்கப்பட வேண்டும். அவை கூட்டுறவு முறையில் சாகுபடி செய்யப்பட வேண்டும். நில வரம்புச்சட்டம் கொண்டுவரப்பட வேண்டும். அந்த நிலம் நிலமில்லா விவசாயிகளுக்குப் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும்.

3. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க ஒவ்வொரு ஆண்டும், புதிய ரோடு போடுதல், நிலம் சமன் செய்தல் போன்ற வேலைகள் தொடங்கப் படவேண்டும்,

4. தாழ்த்தப்பட்ட மக்களுக்கும், ஆதிவாசிகளுக்கும்—மதம் மாறியவர்களும் கூட—அவர்களின் வாழ்க்கைத்தரம் உயருவதற்கான முறையில் உதவிசெய்ய வேண்டும்,

5. நீர்ப்பாசன வசதிகளை முழுக்க உபயோகப்படுத்தும் முறையில் நிலமுள்ள விவசாயிகளுக்கு உதவி செய்யவேண்டும் விவசாயப் பொருட்களின் விலைவாசி நிர்ணயிக்கப்பட வேண்டும்.

இதேபோன்று தொழில்துறையிலும், மானேஜிங் ஏஜென்சி முறை ஒழிக்கப்பட வேண்டும். லாபப் பங்கீடும் கட்டுப்படுத்தப்பட வேண்டும் என்று மட்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன.

### கம்யூனிஸ்ட் கட்சியின் திட்டம்

இதற்கு முற்றிலும் மாறாக கம்யூனிஸ்ட் திட்டத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது நிலப் பிரபுக்களுக்கு குத்தகைதாரர்கள் கொடுக்கும் குத்தகை குறைக்கப்பட வேண்டும். சரியான சட்டத்தின் மூலம் வட்டிக் கடைக்காரர்களின் வட்டி விகிதம் குறைக்கப்பட வேண்டும். அதேபோன்று நாட்டின் வரி விதிப்பு முறை முற்றிலும் மாற்றியமைக்கப்படவேண்டும் பணக்காரர்கள்மேல் வரிப்பளு விழவேண்டும், ஏழைகள்மேல் விதிக்கப்பட்டுள்ள வரிப்பளு குறைய வேண்டும், பணக்காரர்கள் எடுத்துக்கொள்ளும் லாப பங்கீட்டுக்கு ஒரு வரம்பு பேர்டப்பட வேண்டும், அந்த வரம்புக்கு அதிகமான லாபம் சேமிக்கப்பட்டு ராஜ்யத்தின் நன்மைக்காக அரசாங்கத்தால் உபயோகப்படுத்தப்பட வேண்டுமென்றெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சி தனது திட்டத்தில் கோருகிறது.

இரண்டு கட்சிகளுடையவும் திட்டங்களை தாரதம்மியப்படுத்திப் பார்த்தால்தான் இந்த உண்மை புலப்படும். அதாவது பி. சோ. கட்சி, சோஷலிஸத்திற்கு தேசிய உருவம் கொடுப்பதாகச் சொல்லிக் கொண்டு **சுரண்டும் வர்க்கத்தின் நன்மைகளைப் பாதுகாக்கிறது.**

கம்யூனிஸ்ட் கட்சியோ நாட்டின் பெரும்பான்மையான மக்கள் இந்தப் பளுக்களிலிருந்து விடுபடுவதற்காகப் பாடுபடுகிறது. இந்த செல்வாதாரங்களை தேசிய புனரமைப்புக்கு உபயோகப்படுத்தப் பட வேண்டுமென்கிறது.

மார்க்ஸியத்தைப் பின்பற்றுவதற்கும், மார்க்ஸியத்தைப் புறக்கணிப்பதற்குமுள்ள வித்தியாசத்தை இதன்மூலம் உணர்ந்து கொள்ளலாம்.

இந்தக் காரணத்தை முன்னிட்டுத்தான் பி. சோ. கட்சி தனது முழு பலத்தையும் உபயோகித்து கம்யூனிஸ்ட் கட்சியை எதிர்த்து முறியடிக்க முன் வந்துள்ளது. இந்த வெள்ளி விழா மகாநாட்டில் பேசப்பட்ட பேச்சுக்களிலும், போடப்பட்ட தீர்மானங்களிலும் — நிலைமை பற்றிய அரசியல் பேச்சுக்களிலும் சரி, திபெத் பற்றிய விவகாரத்திலும்சரி, கேரளம்பற்றிய பேச்சுக்களிலும் சரி—கம்யூனிஸ எதிர்ப்பு வெறிதான் பிரதிபலித்தது.

நாட்டிலுள்ள கம்யூனிஸ்ட் எதிர்ப்புக் கட்சிகளும், கம்யூனிஸ எதிர்ப்பு சக்திகளும் கூட்டு முன்னணி அமைக்க வேண்டுமென்று குரல் கொடுத்திருக்கிறார்கள்.

கட்சியின் அரசியல் தீர்மானத்தில், நாட்டிலுள்ள ஜனநாயகக் கட்சிகளுக்கு வேண்டுகோள்விடுத்துள்ளது. இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில், நாட்டை எதிர் நோக்கியுள்ள சவாலை சமாளிக்க நாட்டிலுள்ள ஒரு கட்சியால் முடியாது. எனவே, அற்ப விஷயங்களுக்காக போராடிக்கொண்டிருப்பதை எல்லாம் விட்டுவிட்டு இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் எல்லாக் கட்சிகளும் தேச பக்தியுடன் ஒன்றுபட வேண்டுமென்று சகல கட்சிகளையும் கேட்டுக் கொண்டுள்ளது.

மேலும், தேசிய உணர்வு, மதச் சார்பற்ற அரசு, ஜனநாயகம் சோஷலிஸம் ஆகிய காங்கிரஸ் கட்சியின் லட்சியங்களுடன், ஒன்றுபட்டு நிற்பதாகவும் பி. சோ. அரசியல் தீர்மானத்தில் கூறப்பட்டுள்ளது.

எனவே, காங்கிரஸ் கட்சியின் சில லட்சியங்களுடன் பி. சோ. கட்சி ஒன்றுபட்டு நிற்பது வெள்ளி விழாவில் கலந்து கொண்ட சில பிரதிநிதிகள் மனதில் சந்தேகத்தை எழுப்பிற்று. இது காங்கிரஸ் கட்சியுடன் இணைவதற்கான நடவடிக்கையோ என்று அவர்கள் சந்தேகப்பட்டார்கள்; அவர்கள் இதை வன்மையாக எதிர்த்தார்கள். அவர்களுக்கு ஆதரவாக, மகாநாட்டில் கலந்து கொண்ட பிரதிநிதிகளில் 45 சதத்தைத் தங்களுக்கு ஆதரவாகத் திரட்டிவிட்டார்கள்.

### கம்யூனிஸ எதிர்ப்பு

பி. சோ. கட்சியின் வெள்ளி விழாவில் நிறைவேற்றப்பட்ட அரசியல் தீர்மானத்தில் காங்கிரஸ் கட்சிக்கும், பி. சோ. கட்சிக்கும் திட்டங்களிலும், அவற்றை நிறைவேற்றுவதிலும் உள்ள வேறுபாடுகள் கூறப்பட்டிருக்கிறது. அதாவது காங்கிரஸ் கட்சியுடன் கூட்டுச் சேருவது நாட்டிற்கு நன்மை விளைக்காது. மாறாக, நாட்டிலுள்ள தீய சக்திகள் வளர்வதற்கு உதவுவதோடு, மக்கள் மத்தியில் பீதியையும், அதிருப்தியையும் அதிகப்படுத்தும் என்று கூறப்படுகிறது

காங்கிரஸ் கட்சியுடன் தேசம் முழுவதுமான ஒரு கூட்டுறவு ஏற்படுவதை கட்சியின் வெள்ளி விழாவில் தள்ளுபடி செய்த போதும், கேரளத்தில் நடக்க இருக்கும் பொதுத் தேர்தல் சம்பந்தமாய் தேசிய நிர்வாகக் குழு நிறைவேற்றிய தீர்மானத்திற்கு ஒப்புதல் தெரிவிக்கப்பட்டது.

அகில இந்திய ரீதியில் காங்கிரஸ் கட்சியுடன் கூட்டுச் சேர்வதை பி. சோ. கட்சி நிராகரிக்கிறது. ஆனால், அதே நேரத்தில் கேரளத்தைப் பொறுத்த மட்டிலும் பி. சோ. கட்சி காங்கிரஸ் கட்சியுடன் கூட்டுச் சேர்ந்துள்ளது ஏன்? கேரளத்தில் இந்த இரண்டு கட்சிகளுக்குமிடையில் லட்சியங்கள் திட்டங்கள் ஆகியவற்றில் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது. கம்யூனிஸ்ட்கள் தோல்வியடையச் செய்வதற்காக வேண்டியே இந்த ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

இந்த பி. சோ. தலைவர்கள் மத்தியில் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு வெறியிருப்பது ஒன்றும் புதிதல்ல என்பது நமக்குத் தெரிந்த விஷயம்.

இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னால் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சி ஆரம்பிக்கப்பட்ட போது, மசானி, அசோக்மேத்தாபோன்ற தலைவர்களுக்கு கம்யூனிஸ்ட் கட்சி மேல் ஒரு வெறுப்பும், விரோத குரோதமும் கொண்டிருந்தார்கள். ஆனால், திரு. கோ[...]ரே குறிப்பிட்டது போல் அன்று[...]ள்ள காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த பெரும்பான்[...]மை யான வர்கள் 'மார்க்ஸீய'[...] கொள்கையில் நாட்டம் [...] கொண்டவர்களாக இருந்தார்கள்.

எனவேதான் [...], அவர்களால் காங்கிரஸ் [...] சோஷலிஸ்ட் கட்சியைக் கம்யூனி[...]ஸத்தை எதிர்க்கும் ஒரு கரு[...]வியாகப் பயன்படுத்த முடியா[...]மல் போயிற்று. மாறாக, 1936ம் [...] ஆண்டு ஜனவரியில் மீரத்தில் நடை[...] பெற்ற மகாநாட்டில் நாட்டி[...]லுள்ள சகல சோஷலிஸ சக்தி[...]களும், கம்யூனிஸ்ட்கள் உட்பட [...] எல்லோரும் ஒன்றுபட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்டது. சோஷலிஸ்ட்களும் கம்யூனிஸ்ட்களும் இணைந்து செயல்படும் ஒரு புதிய சகாப்தத்தை இது உருவாக்கிற்று.

காங்கிரஸ் சோஷ[...]லிஸ்ட் கட்சியிலுள்ள ஒரு பகு[...]தியினரிடம் மெதுவாக கம்யூனிஸ[...] எதிர்ப்பு விஷத்தைப் பிரச்சார[...]ம் செய்து, இப்போது கம்யூனிஸ[...] எதிர்ப்பு சக்தியின் கேந்திரமாக[...] கட்சியை மாற்றியுள்ளார்கள் இ[...]வர்கள்.

### பி. சோ.வினர் முன்னுள்ள கேள்வி

இப்படிப்பட்டதோர் குருட்டுத்தனமான கம்யூனிஸ எதிர்ப்பு வெறியின் காரணமாக, பி. சோ.வினராலோ, அல்லது அவர்களின் முன்னோடிகளான இந்திய சோஷலிஸ்ட் கட்சியாலோ, காங்கிரஸ சோஷலிஸ்ட் கட்சியாலோ, நாட்டிலுள்ள சிறந்த தேசிய சக்தியாக வளர்ந்தோங்க முடிந்ததா?

மாறாக, கம்யூனிஸ்ட் கட்சி தலைமை தாங்கும் முற்போக்கு சக்திகளை குருட்டுத்தனமாக எதிர்த்ததன் காரணத்தினால் தானே 1952-ல் நடந்த பொதுத் தேர்தலில் பி. சோ. தோல்வி காண நேர்ந்தது. இப்போதும் இவர்கள் கடைப்பிடிக்கும் இந்தக் கொள்கை கட்சியின் வளர்ச்சிக்கு உதவுமா? இக்கேள்விக்கு விடை தான் சரித்திரம் பி. சோ. கட்சியின் முன்னால் வைத்துள்ளது.

—இக் கட்டுரை நவம்பர் 15 நியூ ஏஜ் வார இதழில் எழுதிய கட்டுரையின் தமிழாக்கம்.

## பிடித் தொழிற்சங்க ஊழியர் மறைவு

சென்னை, நவ. 14—

சென்னை ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்க தீவிர ஊழியரும், கம்யூனிஸ்ட் கட்சியின் நெருங்கிய அனுதாபியுமான தோழர் மாரி, 13-11-59 (வெள்ளி) காலையில் இயற்கை எய்தினார் என்பதை ஆழ்ந்த அனுதாபத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## பரம்பிக்குளம் திட்டம்

### சென்னை-கேரள எஞ்சினியர்கள் விவாதம்

திருவனந்தபுரம், நவ. 14—

சென்னை அரசாங்கத்தின் பரம்பிக்குளம் திட்டம் குறித்து சென்னை, கேரள எஞ்சினியர்கள் இன்று விவாதித்தனர்.

நாள்முழுவதும் நடைபெற்ற விவாதங்களுக்குப்பின் அரசாங்க அதிகாரி யொருவர் நிருபர்களைச் சந்தித்தார். விவாத முடிவுகள் இரு அரசாங்கங்களுக்கும் அனுப்பி வைக்கப்படும் எனவும் பின்னர் தொடர்ந்து விவாதங்கள் நடைபெறும் எனவும் அவர் கூறினார்.

சென்னை அரசாங்கத்தின் சார்பில் திரு. யு. அனந்தராவ் இப்பேச்சுகளில் கலந்துகொண்டார். கேரள அரசாங்கத்தின் சார்பில் பிரதம எஞ்சினியர் டி. பி. குட்டியாமு, மின்சாரத் துறை பிரதம எஞ்சினியர் சி. ஓ. ஊமன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

## நகரசபை கவனிக்குமா?

ஐயா,

கோடம்பாக்கம் ஆற்காட்டுச் சாலையிலிருந்து சாலி கிராமம் செல்லுவதற்கும் விஜயா ஸ்டூடியோ செல்லுவதற்கும் கோடம்பாக்கம் போலீஸ் ஸ்டேஷன் எதிரில் இருக்கும் விஜயா ஸ்டூடியோ ரோட்டைத்தான் எல்லா மக்களும் உபயோகப்படுத்துகின்றனர்.

இந்த ரோட்டில் எந்தக் காலத்திலும், மாரிக் காலம் ஆனாலும் சரி, கோடைக் காலம் ஆனாலும் சரி எப்பொழுதும் சகதியாகத் தண்ணீர் தேங்கிக் கிடக்கிறது. இங்குத் தண்ணீர் பி. என் கே. பிரஸிலிருந்தும் பிரசாத் பிராசஸிலிருந்தும் அப்புறப்படுத்தப்படும் அசுத்த நீரால் அந்தத் தெருவிலே இருக்கக் கூடிய மக்களுக்கு சுகாதார வசதி கெடுகிறது.

அசுத்த நீர் தேங்கிக் கிடப்பதாலும் கோடம்பாக்கம் பகுதிகளில் பாதாளச் சாக்கடைகள் அமைக்காமல் இருப்பதாலும், கடந்த ஐந்தாண்டு காலத்தில் கோடம்பாக்கம் வடபழனி பகுதிகளில் அதிகமான மக்கள் குடியேறியதாலும் சுகாதார வசதிகள் கெட்டிருக்கிறது. அதோடு அசுத்த நீரை தெருவிலே விடாமல் உள்ளேயே தேக்கி வைத்து வண்டிகள் மூலம் அப்புறப்படுத்த பி. என். கே. பிரஸ் முதலாளியும் நிர்வாகமும் ஏற்பாடு செய்யவேண்டும்.

நகரசபையும், அதிகாரிகளும் தலையிட்டு வீதியில் அசுத்த நீரை தேங்கிக் கிடக்கவிடாமல் பொறுப்பாளிகள் மீது தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுகிறேன். சம்பந்தப்பட்டவர்கள் ஆவன செய்வார்களா?

கோ. கு. புவியரசு
கோடம்பாக்கம்

★

## கொள்முதல் செய்யத் தயக்கமேன்?

ஐயா,

சென்னை சர்க்கார் உணவுத் தானியக் கொள்முதல் செய்வதை கைவிட்டு விட்டது. இதன் விளைவு கள்ள மார்க்கெட்டுக்குப் பச்சைக் கொடி காட்டுவதுதான். போதிய தானியம் கொள்முதல் செய்து மக்களுக்கு விநியோகம் செய்ய சர்க்கார் முன்வந்தால் மார்க்கெட்டில் விலைகளைக் கட்டுப்படுத்த முடியும். இந்தக் கருத்தை உள்துறை செயலாளர் டி. பி. ஐ. வைத்தியநாதன் குறிப்பிட்டுள்ளார். குறைந்தது 50 சதவிகிதம் தேவைகளை சர்க்கார் ஸ்டாக் செய்து வைத்து வினியோகிக்க முன் வந்தால் இஷ்டம் போல் விலைவாசிகளை ஏற்றும் பேர்வழிகள் தில்லுமுல்லுகளை ஓரளவுக்காவது ஒடுக்கலாமல்லவா! ஆனால் கொள்முதல் விஷயத்தில் சர்க்கார் காட்டும் தயக்கம் அதன் வர்க்கத் தன்மையை அம்பலப்படுத்துகிறது. நிலப்பிரபுக்களும் கொழுத்த வி[...] கள் நெருக்க[...] கும்' பேர்வழி[...] பீடத்திலுள்ள கட்சியில் ஆதிக்கம் வகிக்கின்றனர் என்பது நாடறிந்ததுதானே.

சண்முகம்
மதுரை

★

## வீட்டு வசதி

ஐயா,

அண்மையில் பத்திரிகைகளில் ஒரு விளம்பரத்தைக் கண்ணுற்றேன். நகர அபிவிருத்தி போர்ட் தலைவரின் விளம்பரம் அது. அதில் வருடத்தில் 6000-க்குக் குறைவில்லாத வருமானமுள்ளவர்களுக்கு வீடுகட்டிக் கொடுக்கத் திட்டமிட்டு விண்ணப்பங்கள் கோரப்பட்டிருக்கிறது. 19 ஆயிரம் 20 ஆயிரம்வரை ஒரு வீட்டுக்குச் செலவழிக்கப்படும் எனவும் இத்தொகை 20 வருடங்களில் வசூலிக்கப்படும் என்றும் கூறப்பட்டிருந்தது. இந்த விளம்பரத்தைக் காண அதிசயித்தேன், வருடத்தில் ரூ. 6000 வருமானம் உள்ளவர்கள் தமக்கெனச் சொந்தமாக வீடு கட்டிக்கொள்ள வசதியில்லாதவர்களா? அல்ல. ஆனால் ஏழை நடுத்தர மக்கள் தான் சொந்தமாக வீடு கட்டப் பண வசதியற்றவர்கள், தனியாரிடம் கடன் பெறவும் வசதியற்றவர்கள். சர்க்கார் வீடுகட்டும் திட்டத்திற்கு ஒதுக்கும் பணம் ஏழை நடுத்தர மக்களுக்குப் பயன்படுத்தப்பட வேண்டுமே தவிர வசதியுள்ளவர்களுக்கோ வசதிகளைத் தேடும் சக்தி படைத்தவர்களுக்கோ அல்ல. சர்க்கார் கவனிக்குமா?

பரதன்.
சென்னை-1

## 'தினகரன்' ஆசிரியர் கொலை வழக்கு
### நான்கு எதிரிகளுக்கு மரணதண்டனை

மதுரை, நவ. 14—

ராமநாதபுரம் ஜில்லா காங்கிரஸ் ஊழியரும் 'தினகரன்' என்ற வாரப் பத்திரிகையின் ஆசிரியருமான தினகரசாமி தேவர் கொலையுண்டது சம்பந்தமாகத் தொடரப்பட்ட வழக்கில் இன்று ராமநாதபுரம் செஷன்ஸ் நீதிபதி தீர்ப்பு கூறினுர்.

நான்கு எதிரிகளுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. மற்றிரு எதிரிகள் விடுதலையாயினர்.

மரணதண்டனை உயர்நீதி மன்றத்தால் ஊர்ஜிதம் செய்யப்பட வேண்டும்.

கொலையுண்ட தினகரசாமி தேவரிடம் எதிரிகளுக்கு நீண்ட காலமாக விரோதம் உண்டு என்றும் கடந்த மே மாதம் 13ந்தேதி எதிரிகள் தினகரசாமியை அரிவாளால் தாக்கிக் கொலை செய்தனரென்றும் பிராசிகியூஷன் தரப்பார் கூறினர்.

## குழந்தைகள் தினம்

### திருச்சூரில்

திருச்சூர் நவ. 14—

திருச்சூரிலும், அதைச் சுற்றிலும் உள்ள கல்விஸ்தாபனங்களிலிருந்து 15,000-க்கு மேற்பட்ட மாணவர்கள், இன்று குழந்தைகள் தினக் கொண்டாட்டத்தை யொட்டி நகரின் பிரதான தெருக்களின் வழியாக ஊர்வலமாகச் சென்றனர்.

### கள்ளிக்கோட்டை

குழந்தைகள் தினத்தன்று இங்கு ஜில்லா கலெக்டர் ஒரு குழந்தைகள் பூங்காவைத் திறந்து வைத்தார். பள்ளிக் குழந்தைகளுக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

### இலங்கை

இலங்கைப் பிரதமர் தஹநாயகா பிரதமர் நேருவை வாழ்த்திச் செய்தியொன்று அனுப்பியுள்ளார். இலங்கைப் பத்திரிகைகள் நேருவின் பிறந்த நாளையொட்டி சிறப்புக் கட்டுரைகளைப் பிரசுரித்துள்ளன. "இலங்கையின் உண்மையான நண்பர்" என "ஸிலோன் டெய்லி நியூஸ்" தனது தலையங்கத்தில் எழுதியுள்ளது. நேருவின் மாபெரும் செல்வாக்கும் சமாதானம், வல்லரசு முகாமெதிலும் சேராதிருத்தல் ஆகிய கொள்கைகள் மூலம் அவர் சர்வதேச அரசியலுக்கு அளித்த புதிய மார்க்கமும் இல்லாவிடின் ஐ.நா.விலும் இதர சர்வதேச மேடைகளிலும் இன்று பெற்றிருக்கும் மதிப்பை ஆசிய நாடுகள் பெற முடியாது போயிருக்கும் என அப்பத்திரிகை மேலும் கூறியுள்ளது.

### திருவனந்தபுரம்

திருவனந்தபுரம் பல்கலைக் கழக எடேடியத்தில் ஆறுயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் கூடி நேருவின் பிறந்த நாளைக் கொண்டாடினர். கேரள கவர்னர் டாக்டர் ராமகிருஷ்ணராவ் மலையாளத்தில் உரை நிகழ்த்திஞர். குழந்தைகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஸ்தல மருத்துவ விடுதிகளில் சிகிச்சை பெறும் குழந்தைகளுக்கு இனிப்பு வகைகளும் பாலும் வழங்கப்பட்டன.

### கோவையில் ஆடல் விழா

கோவை நகரின் பல்வேறு தொடக்கப் பள்ளிகளைச் சேர்ந்த சுமார் 3,000 குழந்தைகள், குழந்தைகள் தினத்தையொட்டி நடைபெற்ற ஆடல் விழாவில் பங்கு கொண்டனர். நேருவை வாழ்த்தி அவர்கள் பாடினர்; ஆடி மகிழ்ந்தனர். திருவாட்டி சாவித்திரி சண்முகம் எம். எல். ஏ. விழாவுக்குத் தலைமை வகித்தார். மாவட்டக் கலெக்டர் திரு. எஸ். மணி விழாவைத் தொடங்கி வைத்தார். குழந்தைக் காட்சியில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒன்பது குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. அத்துடன் கலைக் கண்காட்சியில் வைக்கப்பட்ட படங்கள், சித்திரங்களில் சிறந்தவை தேர்ந்தெடுக்கப்பட்டு அவற்றுக்குரிய 28 குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.

### கொல்லம்

கொல்லத்தில் சிறு குழந்தைகளின் பூங்கா திறக்கப்பட்டன. அநேக குழந்தைகள் பங்கு கொண்ட கண் காட்சியும் நடைபெற்றது. சிறந்தகுழந்தைகளுக்கு பரிசும் வழங்கப்பட்டன.

### எர்ணுகுளம்

இங்கு 5000 குழந்தைகள் பல்வேறு பள்ளிக்கூடங்களிலிருந்து ஊர்வலத்தில் பங்கு கொண்டனர். 'பாலவிகார்' என்கிற ஸ்தாபனம், குழந்தைகளின் உடலையும், அறிவையும் வளர்க்க உதவும் ஸ்தாபனம் திறந்து வைக்கப்பட்டது.

## மதுரை மாவட்டச் செய்திகள்

### சின்னுளப்பட்டி சிவாஜி கணேசன் மன்றம்

சின்னுளப்பட்டி, நவ. 8—

சின்னுளப்பட்டி சிவாஜி கணேசன் கலைமன்றத்தின் உறுப்பினர்கள் கூட்டம் 20-10-59-ல் நடைபெற்றது. கவிஞர் கல்யாணசுந்தரம், கலைஞர் ஆர். நாகேசுவர ராவ் முதலியோர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மன்றத்தில் முதலாண்டுவிழாவை நவ. 30-ல் நடத்துவதெனவும் விழாவிற் கலந்துகொள்ள என். ஆர். தியாகராஜன் கலைஞர் டி. கே. பாலச்சந்திரன் முதலியோரை அழைப்பதெனவும் விழாவையொட்டி ஏழை மாணவர்களுக்குப் பகலுணவு அளிப்பதெனவும் முடிவு செய்யப்பட்டது.

### ஜி. கல்லுப்பட்டியில் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்கூட்டம்

ஜி. கல்லுப்பட்டியில் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம் பி. வி. பழனிச்சாமி தலைமையில் நடைபெற்றது. வி. மதனகோபால், எஸ். எஸ். பழனிச்சாமி, எஸ். ஏ. ரஜாக், அப்துல் ரஹ்மான் ஆகியோர் பேசினர். மாலையில் நடைபெற்ற ஊர்வலத்தில் ஏராளமானோர் கலந்து கொண்டனர். கவிஞர் கல்யாணசுந்தரம், இலரா, வெங்கடாசலம் ஆகியோர் மரணத்துக்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது. ஜி. கல்லுப்பட்டிக்கு 2 மலிவு தானியக் கடைகள் வேண்டுமென வற்புறுத்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சகல அரிசி ஆலைகளையும் விநியோகத்துக்கு அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

### வட மதுரையில் வி. மதனகோபால் பேச்சு

வட மதுரையில் கம்யூனிஸ்ட் கட்சிபொதுக்கூட்டம் 25-10-59ல் நடைபெற்றது. எஸ். பழனியப்பன் தலைமைவகித்தார். எம். ராமமூர்த்தி, சோ. கருப்பையா, வி. மதனகோபால் ஆகியோர் பேசினர். மதனகோபால் பேசுகையில் விலைவாசி உயர்வைக் கண்டித்தார். அரசாங்கத்தின் போக்கால் அவதியுறும் பொது மக்கள் நிலையை விளக்கினர். வெங்கடாசலம், இலரா, கவிஞர் கல்யாணசுந்தரம் ஆகியோர் மறைவுக்கு வருத்தம் தெரிவிக்கப்பட்டது. படி அரிசி 12 அணுவுக்குத் தரப்பட வேண்டுமென வற்புறுத்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது,

### மண்சரிந்து ஒருவர் பலி மற்ருெருவர் கவலைக்கிடம்

சென்னை, நவ. 14—

கோடம்பாக்கம் ஆற்காடு ரோடில் தொழில் நுட்பக் கல்லூரிக்காக கட்டிடம் கட்டப்பட்டு வருகிறது. அஸ்திவாரம் தோண்டும் வேலையில் ஈடுபட்டுக்கொண்டிருந்த இரு தொழிலாளர் மீது மண் சரிந்து, புதையுண்டு மீள முடியவில்லை. வெளியில் நின்றவர்களின் கூக்குரல் கேட்டுப் பலர் திரண்டு புதைந்தவர்களைத் தோண்டி எடுத்ததில் ஒருவர் கவலைக்கிடமான நிலைமையில் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டுள்ளார். மற்ருெருவரின் உயிர் நீங்கிவிட்டது. இறந்தவர் பெயர் சு. சுப்ரமண்யம்.

இந்த பரபரப்பான விஷயம் பரவி ஏராளமான மக்கள் கூடிவிட்டனர். போலீஸ் உதவியோடு அவர்கள் கலைக்கப்பட்டனர்.

ஆம்புலன்ஸ், மற்றும் தீயணைக்கும் படையினரும் ஸ்தலத்திற்கு வந்து சேர்ந்தனர். கட்டிட வேலையில் நிர்வாகத் திறமையின்மையே மேற்கண்ட சம்பவத்திற்குக் காரணம் என்று மக்கள் பேசிக்கொள்கின்றனர் (ந.நி.)

### நீலகிரியில் கச்சா பிலிம் தொழிற்சாலை

சென்னை, நவ. 14—

புகைப்பட கச்சாப் பொருட்களைத் தயார் செய்யும் தொழிற்சாலை ஒன்று நீலகிரியில் அமைக்கப்படும் எனத் தெரிகிறது. இத்தொழிற்சாலை 10 கோடி ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்படும். இந்த தொழிற்சாலை அமைப்பதற்கான உதவி பெரும்பாலும் மேற்கத்திய நாடுகளிலிருந்து கிடைக்கும். இந்த தொழிற்சாலை பொதுத் துறையில் நிர்மாணிக்கப்படுமென்று தெரிகிறது.

இது சம்பந்தமாய் நீலகிரிக்கு விஜயஞ்செய்த பிரெஞ்சு நிபுணர் ஹூரிஸ் பி. போயிஸ் புகைப்பட கச்சா பிலிம் தொழிற்சாலை நிர்மாணிப்பதற்கு ஏற்ற இடம் நீலகிரி என்றார். இங்கு அதிகப்படியான தண்ணீர் இருக்கிறது. மேலும், மிகவும் குளுமையான சீதோஷ்ண நிலைமையும் இதற்குச் சாதகமாக இருக்கிறது என்ருர்.

இப்போது இந்தியா ஆண்டு ஒன்றுக்கு ரூ. 5,00,00,000-க்கான கச்சா பிலிம் இறக்குமதி செய்கிறது. இந்தத் தொழிற்சாலை நிர்மாணிக்கப்படுமெனில் நாட்டின் தேவையை ஓரளவு பூர்த்தி செய்யும்.

# ரஷ்யாவில் ராக்கெட் கண்டுபிடித்தால் இங்கு ரப்பர் அரிசி கண்டுபிடிக்கிருர்கள்

## விலைவாசியைக் கட்டுப்படுத்த சர்க்காரே கொள்முதல் செய்க!

### மாதவரத்தில் தோழர் ஜீவா முழக்கம்

மாதவரம், நவ. 15—



நகர கம்யூனிஸ்ட் கட்சி கிளை, மாதவரம் தோல் பதனிடும் தொழிற் சங்கம் ஆகியவற்றின் சார்பில் பஞ்சாயத்து போர்டுமைதானத்தில் நவ. 1-ந் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலை 5 மணிக்கு மாதவரம் கட்சிக் கிளையின் செயலாளரும், பஞ்சாயத்து போர்டு மெம்பருமான தோழர் மா. பொ. சுப்பிரமணியம் தலைமையில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் தமிழக கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் தோழர் ப. ஜீவானந்தம் அவர்கள் சொற்பொழிவாற்றிஞர். அவர் பேசுகையில், "இன்று நான் கூட்டத்திற்குக் காலதாமதமாக வந்தேன். உங்களை முன்கூட்டியே வந்து சந்திக்கமுடியாமல் போனதற்கு வருந்துகிறேன். அதே சமயத்தில் உங்களை மகிழ்விக்கக்கூடிய ஒரு செய்தியையும் தெரிவிக்கப் போகிறேன். அது என்னவென்ருல், இன்று தி.மு.க., சோஷலிஸ்டு கட்சி, தமிழரசுக்கழகம், காங்கிரஸ் சீர்திருத்தக் குழு, கம்யூனிஸ்டுக் கட்சி ஆகிய கட்சிகளின் தலைவர்கள் அண்ணாவுடன் இன்று கூடி சர்வ கட்சி போராட்டக் கமிட்டி அமைக்கப்பட்டிருப்பதுதான் அந்தச் செய்தி என்ருர். (கை தட்டல்)

#### நமது கண்டுபிடிப்பு

அவர் மேலும் பேசுகையில், "கம்யூனிஸ்டுக் கட்சி நடத்தவிருக்கும் உணவு விலைவாசி உயர்வு எதிர்ப்புப் போராட்டம், ஒரு கட்சிப் பிரச்சினையல்ல.

"நியாயவிலைக் கடைகளை திறந்திருக்கும் இன்று நிலைமை யென்ன? நியாய விலைக் கடைகளின் மூலம் அரிசி விலை அநியாயமாக விற்பதை தடுக்க முடியவில்லை என்பது மட்டுமல்ல, நியாயவிலைக் கடையில் விற்கப்படும் அரிசி நல்ல அரிசியாக இல்லை. நாற்றமெடுத்த அரிசியாகத்தான் இருக்கிறது. நாற்ற மட்டுமல்ல; நியாயவிலைக் கடையில் விற்கப்படும் அரிசி ரப்பரைப் போல இருக்கிறது. இந்த அரிசியை வாங்கியவுடன் அடுத்த கடையில்—கட்டை தொட்டியில்—கட்டை வாங்கவேண்டிய நிலையில் அரிசி இருக்கிறது.

"இன்று தமிழ் நாட்டில் ஆராய்ச்சி திறன் அந்த அளவில் இருக்கிறதென்பதையும் அடுத்த நாடுகளின்—ஆராய்ச்சியையும் பாருங்கள். ரஷ்யக்காரன் ராக்கெட்டை கண்டுபிடித்து சந்திரனுக்கு அனுப்புகிருன். நம்ம நாட்டவன் ரப்பர் அரிசியை கண்டுபிடித்து நமக்கு அனுப்புகிருன்." (சிரிப்பு-கைதட்டல்)

#### போலீஸ் இலாகா எதற்கு?

"நாற்றமெடுத்த அரிசியை போடுகிருர்களே என மந்திரி பக்தவத்சலத்திடம் கூறிஞல், எங்கே போடுகிருர்கள், அப்படி இருக்காதே, காட்டுங்கள் என்று எங்களைக் கேட்கிருர். நான் கேட்கிறேன், இவர் அரிசிக்கு மட்டுமா மந்திரி. இவருடைய போலீஸ் இலாகா என்ன செய்கிறது? தோல் பதனிடும் தொழிலாளிகள் கூலி கேட்டால் அவர்கள் மண்டையை பதம் பார்க்க மட்டுமா? உணவுச் சூதாடிகளை ஒன்றும் செய்யாதா? நான் இவர்களின் மண்டையை உடைக்கச் சொல்லவில்லை, குறைந்தது பத்து நாளைக்கு கம்பி எண்ண அனுப்பக்கூடாதா? என்றுதான் கேட்கிறேன்.

#### மந்திரிமார் கூறுவதை மறுக்கவில்லை

இன்று நாள்தோறும் உணவுப் பிரச்சினையைப் பற்றி மந்திரிகள் அறிக்கை வந்துகொண்டேயிருக்கிறது.

இன்றைய பத்திரிகைகளைப் பற்றித்தான் உங்களுக்குத் தெரியுமே, "மந்திரி புளுகிஞல் ஐவ்வாது வாசனை வீசியது" என்று வெளியிடும் பத்திரிகைகள்தானே நமது நாட்டில் இருக்கின்றன. உணவுப் பிரச்சினை சம்பந்தமாக மந்திரிகள் நமது ராஜ்யம் பற்றுக்குறை ராஜ்யமல்ல. கிட்டதட்ட சுயதேவைப் பூர்த்தி செய்துகொள்ளுகிறோம் என்று கூறி நமது ராஜ்யத்தில் உணவுப் பிரச்சினை இல்லை எனக் காட்ட முயல்கிருர்கள்.

நாமும் ஒப்புக்கொள்ளுகிறோம். இது மட்டுமல்ல, பக்ரா நங்கல், ஹிராகுட், நாகார்சுன சாகர், லோயர்பவானி மணிமுத்தாறு, சாத்தனூர், மேட்டூர் போன்ற அணைக்கட்டுகள் கட்டப்பட்டிருக்கின்றன எனக் கூறுகிருர்கள். ஆமாம், இதன்மூலம் லட்சக்கணக்கான ஏக்கர் நிலங்களுக்கு பாசன வசதி கிடைத்திருக்கின்றன என்ருர்கள். "ஆமாம், ஆமாம்".

"சிந்திரி உரம்", "சீமை உரம்", "பாஸ்போட் உரம்", "பசுந்தழை உரம்" ஆகியவைகள் உற்பத்தி செய்யப்பட்டு விவசாயத்திற்கு உபயோகப்படுத்தியிருக்கிறோம் என்கிருர்கள். ஆமாம், ஆமாம், ஆமாம்.

ஜப்பான் முறையில் சாகுபடி செய்து வருகிறோம். புதிய கலப்பைகள், டிராக்டர்கள் கொண்டு உணவு உற்பத்தி செய்யப்படுகிறது. ஆமாம், தேசிய விஸ்தரிப்புத் திட்டம், தேசிய வளர்ச்சி திட்டம்போன்ற எத்தனையோ அபிவிருத்தித் திட்டங்கள் போட்டு நிறைவேற்றியுள்ளோம் என்கின்றனர். ஆமாம், ஆமாம், ஆமாம். மறுக்கவில்லை.

#### குற்றம் எங்கே இருக்கிறது?

நமது முதல்வர் பண்டித நேருஜி கூறுகிறார். 2-வது ஐந்தாண்டு திட்டங்கள் நிறைவேறிவிட்டால் ஒரு நெல் மணிக்கூட வெளியிலேயிருந்து இறக்குமதி செய்யப் போவதில்லை என்று கூறினர். சந்தோஷப்பட்டோம். ஆனல் இவ்வளவு முன்னேற்ற முறைகளைக் கையாண்டும், பலவித சாகுபடி முறைகளைக் கையாண்டும், பல லட்சக்கணக்கான ஏக்கர் நிலங்களை புதிதாக சாகுபடிக்கு கொண்டு வந்தும்—பலவிதமான திட்டங்களைப் போட்டும், ஏன் அரிசி விலை உயருகிறது? உணவுப் பொருள்கள் விலை உயருகிறது? (மக்கள் கைதட்டல்—ஆரவாரம்) என்று கூறினர்.

தோழர் ஜீவா தொடர்ந்து பேசுகையில், "இதற்கு காரணம் என்ன? இந்நிலைமைக்கு காமராஜ், நேருஜி பக்தவத்சலம் போன்றவர்களின் தனிக் குற்றமா? இல்லை. ஆண்டவனே வந்து ஆண்டாலும் இதுதான் நடக்கும். குற்றமெல்லாம் சர்க்காரின் கொள்முதல் கொள்கையில்தான் இருக்கிறது! இந்த சர்க்கார் கொள்முதல் செய்ய மறுக்கிறது. பெருநிலச் சொந்தக்காரர்களிடம் போய் கொள்முதல் செய்ய அஞ்சுகிருர்கள். திருவாவடுதுறை மடம், திருப்பனந்தாள் மடம், குன்னியூர் ஐயர், நெடும்பலம் முதலியார் போன்ற நிலப்பிரபுக்களிடம் போகப் பயப்படுவது ஏன்?

#### கொள்முதல் செய்க

"சர்க்காரின் நடவடிக்கை இது விஷயத்தில்நியாயமானதாயில்லை. த. நா. கா. கமிட்டியில் இருந்த ராமமூர்த்தி புள்ளிவிபர நிபுணர் 50 ஏக்கர் மேலுள்ளவர் 7 சதம் என்கிருர். கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது. 50 ஏக்கர் மேலுள்ளவர்களிடம் 75 சதம் கொள்முதல் செய்ய வேண்டுமென்கிறது, இப்படி கொள்முதல் செய்தால் அரிசி விலையை நிச்சயம் குறைக்க முடியும்."

இதைவிட்டு மந்திரி பக்தவத்சலம் மத்திய சர்க்காரை காட்டுகிருர். மத்திய மந்திரி எஸ். கே. பட்டீல் அமெரிக்காவிலிருந்து 50 லட்சம் டன் தானியம் வாங்கவேண்டும் என்கிருர். ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேறிஞல், ஒரு மணி நெல்கூட வெளியிலிருந்து இறக்குமதி செய்யப்போவதில்லையென்று நேருஜி கூறிஞரே என்ன வாயிற்று?

#### போராடுவோம்

"இந்த சர்க்காரை நாம் நம்ப முடியாது. சர்க்காருடைய கொள்கை யாருக்கு சாதகமானது என்பதை நெடுகலும் நாம் அறிந்ததுதான். குழந்தைகூட பசித்தால், சோற்றுக்காகத் தாயிடம் சண்டை போடுவதை, அடம்பிடித்து அழுவதைப் பார்க்கிறோம். எனவே சண்டை போடாவிட்டால் இப்பிரச்சினை தீராது. அதுவும் நமது சர்க்கார் தாயாக இருந்தாலும் பரவாயில்லை. உணவுப் பிரச்சினை ஒரு கட்சிப் பிரச்சினையல்ல. வாழும் மக்களின் வாழ்வும் உயிரும் பற்றியவர்களின் பிரச்சினையாகும்" என்று கூறி முடித்தார்.

கூட்டத்தில் உணவு விலைவாசிகள் உயர்வைக் கண்டித்தும் மூலக்கடை வேஸ்ட் காட்டன் கம்பெனியில் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்த 20 ஆண் பெண் தொழிலாளர்கள் மீது வழக்குப் போட்டிருப்பதை வாபஸ் வாங்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தோழர் ஜீவாவிற்கு, கட்சியின் மாதவரம் கிளை, தோல் பதனிடும் தொழிற்சங்கம், வேஸ்ட் காட்டன் தொழிற்சங்கம், வடப்பெரும்பாக்கம் வட்டார விவசாயிகள் சங்கம், ஹோட்டல் ஷாப்பு, நாயக்கர் ஷாப்பு, ஜாங்கிரி ஷாப்பு, கபூர் ஷாப்பு, ஆகியவற்றின் தொழிலாளிகள், கல்பாளையம் குவாரி லாரி தொழிற்சங்கம், தியாகராஜன் நினைவு இன்னிசை மன்றம் ஆகிய ஸ்தாபனங்கள், தனி நபர்கள் சார்பில் மலர்மாலைகளும், கைத்தறித் துண்டுகளும் போடப்பட்டது.

கூட்டத்தின் ஆரம்பத்தில் தோழர் சி. கெ. மாதவன் (பஞ்சாயத்து போர்டு தலைவர்) ஸ்தல பஞ்சாயத்து நிலவரங்களையும், பஞ்சாயத்துத் தலைமை பொறுப்பிலிருந்து விலக்கப்போவதாக நோட்டீஸ் வந்துள்ள காரணத்தைக் கூறியும், இதுகண்டு நாம் அதிர்ச்சியடையவில்லையென்றும், கேரளத்தின் சரித்திரமே இதற்குச் சான்று என்றும் கூறிஞர். —ந-நி.

## மௌனம் ஏனுங்க?

(கோம்பைக் குழகன்)

1

விளைந்தும் பஞ்சம் என்று சொல்ல வெட்க மில்லையா?—நிலை
குலைந்து வாடும் மக்கள் மீது இரக்கம் வல்லையா?
அளந்து வாங்கும் அரிசியிலே அதிக நாத்தங்க!—இதை
அரசினர்கள் அறிந்திருந்தும் மௌனம் ஏனுங்க?

2

படியரிசி ரூபாய் ஒண்ணே காலு விலையுங்க!—அதில்
பாதியரிசி; பாதி கல்லும் மணலுந் தானுங்க!
குடியரசு சர்க்காரிலே உள்ள நிலைமைங்க!—இந்தக்
குறையை எடுத்துச் சொல்லப் போனு கோபம் வருதுங்க!

3

படியரிசி பனிரெண்டணு விலைக்குக் கிடைக்கணும்!—அதைப்
பஞ்சை மக்கள் வாங்கியுண்டு மனது மகிழணும்!
குடியரசில் வாழும் மக்கள் குறைசொல்ல லாமா?—பெரும்
கொள்ளை லாபம் அடிப்பவரை விட்டிட லாமா?

4

புளி, மிளகாய், சர்க்கரைக்கும் கிராக்கி தானுங்க!—இவை
பொல்லா விலை ஏறிப் போச்சு; கிடைக்கவில்லைங்க!
வழி யறியா மக்கள் நிலைமை மிகவும் மோசங்க!—இதை
மாத்த வழி பாத்திடணும் ஒண்ணு சேருங்க!

## ஜனசக்தி நிதி

| | |
|---|---|
| 9-9-59ல் தூக்கணும்பாக்கத்தில் நடந்த தோழர் கணபதி சகோதரியின் திருமணத்தின்போது நன்கொடை | ரூ. 2-00 |
| வத்ராப் தோழர் பி. ராஜு—மீனுட்சி திருமணத்தின் போது | ரூ. 2-00 |
| மேட்டூர் தோழர் கே. எஸ். முத்துசாமி குழந்தைகள் காதணி விழாவின்போது | ரூ. 5-00 |
| 14-9-59ல் இருகூர் தோழர் ரா. நடராஜன்-சரஸ்வதி திருமணத்தின்போது | ரூ. 5-00 |
| 9-9-59ல் நல்லூர் தோழர் எம். வி நடராஜன்-மரகத வல்லி திருமணத்தின்போது | ரூ. 1-00 |
| நீ. வேய்ங்குளம் தோழர் ராமசாமி-அமராவதி திருமண நன்கொடை | ரூ. 2-00 |
| குமரெட்டியாபுரம் விவசாய சங்க நன்கொடை | ரூ. 2-00 |
| கிருஷ்ணபுரம் கட்சி கிளை உதவி செயலாளர் தோழர் எம். கைலாசநாதன் மூலம் | ரூ. 1-00 |
| 14-9-59ல் காரைக்குடியில் தோழர் முத்துவடுகு-பொய்யநாயகி திருமண நன்கொடை | ரூ. 2-00 |
| புதுவை, புதுக்குப்பம் கட்சி கிளை செயலாளர் தோழர் முத்துசாமியின் குழந்தைக்கு ஜீவா என்று பெயர் சூட்டப்பட்ட பொழுது | ரூ. 3-00 |
| கோபிசெட்டிபாளையம் ஒரு அனுதாபி மூலம் | ரூ. 10-00 |
| கணக்கம்பட்டி தோழர் எஸ். விரப்பன்-வேலாத்தாள் திருமண நன்கொடை | ரூ. 5-00 |
| அய்யர்கரும்பப்பாளையத்தில் தோழர் கிரிவேலு-பத்மாவதி திருமணத்தின்போது | ரூ. 2-00 |
| கொல்லம்பாளையம் தோழர் ஈ. துரைசாமிக்குப் பெண் குழந்தை பிறந்ததற்காக | ரூ. 1-00 |
| ராசிபாளையம் ஆர். கிருஷ்ணன்-சரஸ்வதி திருமணத்தின் போது | ரூ. 1-50 |
| | ரூ. 44-50 |

## போலீஸ் இலாகாவின் பொறுப்பற்ற போக்கு!

சென்னை, நவ. 14—

"9-11-59 அன்று இரவு சென்னை நகர ஓட்டல் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக மாம்பலத்தில் நடைபெற்ற கூட்டத்தில் கலந்துகொண்டு ஓட்டலுக்குத் திரும்பிக்கொண்டிருந்த அமிஞ்சிக்கரை ஜோதிபவனில் வேலைபார்க்கக்கூடிய மூன்று தொழிலாளர்களை நுங்கம்பாக்கம் போலீஸார் பிடித்து ரிமாண்டில் வைத்துள்ளனர்.

தொழிலாளர் மூவரும் போலீஸ்காரரிடம் நடந்த விஷயங்களைத் தெரிவித்தும் தங்கள் விலாசத்தைக் கூறியும் போலீஸ்காரர்கள் அதைப் பொருட்படுத்தாமல் சிறையில் அடைத்து வைத்திருக்கிருர்கள்.

ஐந்து நாட்களாக நாங்கள் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து கமிஷனர் ஆபீஸ் வரை சென்று விஷயத்தை எடுத்துக்கூறி விடுதலை செய்யும்படிக் கோரியும், மறுத்துவிட்டனர். ஜாமீனில் விடும்படி கோரி மனு தாக்கல் செய்தும் தட்டிக் கழித்து வருகின்றனர்.

இந்த மாதிரி நடவடிக்கைகள் இன்று புதிதல்ல. பல இடங்களில் தொழிலாளர்களை இம்மாதிரி துன்புறுத்தி வருகின்றனர். இத்தொழிலாளர்களின் வேலைக்கே ஆபத்து வரக்கூடிய நிலைமை ஏற்படுவதால் போலீஸ் இலாகாவின் இம்மாதிரி பொறுப்பற்ற செய்கைகளை வன்மையாகக் கண்டிக்கிறோம்.

மேற்படி மூன்று தொழிலாளர்களையும் 5 நாட்களாக சிறையில் அடைத்து வைத்து துன்புறுத்துகின்றனர். "குற்றமேதும் செய்யாதிருந்த போதிலும் தொழிற்சங்க ஊழியர்கள் மூன்று பேர் ஐந்து நாட்களாக சிறையிலே வாடுகின்றனர். உடனடி அவர்களை விடுதலை செய்யவேண்டும்.

இம்மாதிரியான சம்பவங்கள் மேலும் நிகழாமல் இருக்க போலீஸ் இலாகா தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டுமென கேட்டுக்கொள்கிறேன், என்று சென்னை நகர ஓட்டல் தொழிலாளர் சங்கத்தின் துணைச் செயலாளர் தோழர் பி. வி. சீனிவாசன் அறிவிக்கிருர்.

## குழந்தைகள் தினத்தில் 16 குழந்தை நூல்கள் வெளியீடு

சென்னை, நவ. 14—

பன்னிரண்டு ஆசிரியர்கள் எழுதி, பத்துப் பதிப்பகத்தார் தயாரித்த பதினுறு குழந்தைப் புத்தகங்களை அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் நேற்று மாலை குழந்தை எழுத்தாளர் சங்கம் ஏற்பாடுசெய்த குழந்தைகள் தின விழாவில் வெளியிட்டார்.

சென்ற மூன்ருண்டுகளாகக் குழந்தைகள் தினத்தைப் பல குழந்தைப் புத்தகங்களை வெளியிட்டுக் கொண்டாடிவரும் இச்சங்கத்தின் முயற்சி பயனுள்ளது என்றும் பாராட்டுதற்குரியதுஎன்றும் அமைச்சர் கூறிஞர். தமது பிறந்தநாளைக் குழந்தைகள் தினமாகக் கொண்டாட வேண்டுமென்பதே நேருஜியின் விருப்பம் என்றும் குழந்தைகளின்பல்வேறு நலன் குறித்து ஆவன செய்ய வேண்டுமென்று வலியுறுத்துவதே இத்தகைய விழாக்களின் நோக்கமென்றும் கூறிஞர்.

விழாவுக்குத் தலைமை வகித்த திரு. க. சந்தானம், ஆண்டுதோறும் குழந்தைப் புத்தகங்கள் பல இந்நன்ஞளில் வெளிவர வேண்டுமென்றும் அப்புத்தகங்கள் எல்லாக் குழந்தைகளுக்கும் கிடைக்க அரசினர் ஆவன செய்ய வேண்டுமென்றும் கூறிஞர். குழந்தைகளுக்குக் கதை சொல்லும் பழக்கம் மீண்டும் பெற்ருேரிடையே ஏற்படவேண்டும் என்றும் குறிப்பிட்டார். விழாவில் வெளியிட்ட புத்தகங்களின் ஆசிரியர்களைத் திரு. பூவண்ணனும், பதிப்பாளர்களை திரு. க. அ. செல்லப்பனும் சபையோர்க்குத் தக்க முறையில் அறிமுகம் செய்வித்தனர்.

குழந்தைப் புத்தகங்களின் தேவையும் அவற்றைக் கருத்தோடும் கவர்ச்சியோடும் வெளியிட வேண்டிய அவசியத்தையும் திரு. ஏ. ஜி. வேங்கடாச்சாரி வலியுறுத்திஞர், இராமாயணமும் பாரதமும் குழந்தைகளுக்கு ஏற்ற வகையில் சித்திரப் புத்தகங்களாக வெளிவரவேண்டும் என்ற ஆசையையும் வெளியிட்டார்.

கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கச் செயலாளர் திரு. ப. ந. தியாகராசர் வங்க மொழியில் குழந்தை இலக்கியம் வியத்தகு முறையில் வளர்ந்துள்ளதை எடுத்துக்காட்டி, தமிழிலும் திறமையுடன் எழுதக்கூடிய பலர் இருக்கின்றனர் என்றும் அவர்களுக்கு வேண்டிய வாய்ப்பும் வசதியும் அளிக்கப்படவேண்டும் என்றும் கூறிஞர்.

குழந்தைகளின் மனத்தைப் பண்படுத்தும் வகையில் குழந்தை இலக்கியம் இயற்றப்பட வேண்டும் என்றும், குழந்தைகளுடன் நெருங்கிப் பழகும் தாய்மார்கள் இத்தகைய இலக்கியத்தையே ஆதரிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

தொடக்கத்தில் சங்கத் தலைவர் திரு. அழ. வள்ளியப்பா அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில், குழந்தை எழுத்தாளர் சங்கம் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்காக செய்துவரும் பல பணிகளில் ஆண்டுதோறும் குழந்தைகள் தினத்தில் பலகுழந்தைப் புத்தகங்கள் வெளியாகஉதவிவருவதே சிறந்த பணி எனக் கருதுவதாகக் கூறிஞர். திரு. பூரம் நன்றி கூறிஞர்.

## சென்னை ஓட்டல் தொழிலாளர் கிளர்ச்சி

சென்னை, நவ. 14—

விலைவாசி உயர்வைக் கண்டித்தும் ஓட்டல் தொழிலாளர்களின் பொதுவேலை நிறுத்தத்தை ஆதரித்தும் சென்னை நகர ஓட்டல் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக மவுண்டுரோடு, மாம்பலம், திருவல்லிக்கேணி, தங்கசாலை, பாரீஸ், புரசைவாக்கம் முதலிய இடங்களில் பெரிய ஊர்வலங்களும் பொதுக் கூட்டங்களும் நடைபெற்றன.

ஓட்டல் முதலாளிகளின் கதவடைப்பையும் சென்னை சர்க்காரின் தொழிற் கொள்கையையும் விலைவாசி உயர்வையும் கண்டித்து சர்வ கட்சிகள் கூட்டாக உணவு விலை குறைப்புக்கு எடுக்கும் நடவடிக்கையை ஆதரித்தும் பொதுவேலை நிறுத்தத்தின் முக்கியத்துவத்தையும் ஓட்டல் தொழிலாளரின் துயர நிலைமையையும் விளக்கி தோழர்கள் பி. ஜி. கெ., பி. வி. சீனிவாசன் முதலியோர் பேசினர். முதலாளிகளின் தாக்குதல்களை எதிர்த்து முறியடிக்க தொழிலாளர்களை ஸ்தாபன ரீதியாக திரட்டும்படி சங்க ஊழியர்களுக்கு அறைகூவல் விட்டனர்.

# பஞ்சசீலக் கோட்பாடுகளை நிலைநிறுத்த நேரு - சூ யென்-லாய் சந்தித்துப் பேசுக!

## சென்னை சமாதானக் கமிட்டி கோரிக்கை

சென்னை, நவ. 14—

சென்னை சமாதானக் கமிட்டியின் கூட்டம் டாக்டர் சி. ஆர். கிருஷ்ணபிள்ளை தலைமையில் இன்று கூடியது.

அண்மையில் அகால மரணமடைந்த சமாதான இயக்கத் தலைவர்களான, இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா, கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், ஆகியோர் மறைவிற்கும், டாக்டர் ஜான் மத்தாய் மறைவிற்கும் வருந்தும் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஒரு நிமிடம் எழுந்து நின்று மௌனம் அனுஷ்டித்து கமிட்டியினர் அஞ்சலி செலுத்தினர்.

### நேருவுக்கு வாழ்த்து

"தேசங்களிடையே நல்லெண்ணமும் நட்புறவும் வளரவும், பஞ்சசீலக் கோட்பாடுகளை உறுதியாகக் கடைப்பிடிக்கவும், உலக சமாதானத்தை நிலைநிறுத்தவும் பிரதமர் நேரு அவர்கள் புரிந்து வரும் சேவைகளைப் பாராட்டி அவரது பிறந்த நாளாகிய இன்று நீடித்த ஆயுளுடன் அவர் திடகாத்திரமாக வாழவேண்டும் என்றும் மனப்பூர்வமான தன் நல்வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்ளுகிறது" என்ற தீர்மானம் கரகோஷங்களுக்கிடையே நிறைவேற்றப்பட்டது. நேரு அவர்களுக்கு வாழ்த்துக் கூறும் தந்தியும் அனுப்பப்பட்டது.

### இந்திய-சீன எல்லைப் பிரச்சினை

பின்னர் தலைவர் டாக்டர் கிருஷ்ணபிள்ளை, திரு. ஏ.எஸ்.கே. அய்யங்கார், திரு. கே. வெங்கட்ராமன் ஆகியோர், "இந்திய-சீன எல்லைப் பிரச்சினை பற்றியும் பஞ்சசீலக் கர்த்தாக்களான இவ்விரு தேசங்களின் நட்புறவு பலப்படவேண்டிய அவசியம் பற்றியும்" நன்கு விளக்கிப் பேசினர்.

பின்னர் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேறியது. "அண்மையில் நடைபெற்றுள்ள இந்திய - சீன எல்லைகள் சம்பந்தமான துரதிர்ஷ்டவசமான சில சம்பவங்களைக் கண்டு சென்னை சமாதானக் கமிட்டி ஆழ்ந்த கவலையை தெரிவித்துக் கொள்கிறது.

### நேரு - சூ-யென்-லாய் சந்திக்கவும்

"இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக, சரித்திர பூர்வமான நட்புறவு பூண்டிருந்த இணை பிரியாத இரு தேசத்தலைவர்களும் பஞ்சசீலக் கோட்பாடுகளின் கர்த்தாக்களுமான, இந்திய-சீனப் பிரதமர்கள, இருவரும் விரைவில் சந்தித்து, இந்திய-சீன எல்லைகள் சம்பந்தமான தகராறுகளைத் தீர்த்துக்கொள்ள, பேச்சு வார்த்தைகள் நடத்தி சமாதான பூர்வம் தீர்வு காண வேண்டும்" என்றும் சென்னை சமாதானக் கமிட்டி விருப்பம் தெரிவித்துக் கொள்ளுகிறது.

"சமாதானவிரோதிகளின் வீண் கனவுகளுக்கெதிராக இந்திய-சீனப் பிரதமர்கள் பேச்சுவார்த்தைகளைத் தொடங்குவதன்மூலம் பஞ்சசீலக் கோட்பாடுகளை நிலைநிறுத்தவும், ஆசிய மக்களின் முன்னுதாரணமாகத் திகழவும், உலக சமாதானப் பாதுகாவலர்களாக விளங்கவும் வேண்டு" மென்றும் சென்னை சமாதானக் கமிட்டி நம்பிக்கைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

### உச்சகட்ட மகாநாடு

சோவியத் பிரதமர் குருஷ்சேவின் அமெரிக்க விஜயத்திற்குப் பின்னர், உலகெங்குமுள்ள சமாதான சக்திகளுக்குப் புதிய தெம்பும் நம்பிக்கையும் பிறந்துள்ளது.

உச்சகட்ட மகாநாடு விரைவில் ஏற்படக்கூடியதற்கான அறிகுறிகள் உள்ளன.

அணு ஆயுத சோதனைகள் சம்பந்தமான ஜெனிவா மகாநாடு கூடுகிறது.

இந்திய-சீன எல்லைத் தகராறுகளை வைத்துக் கொண்டு இந்திய சர்க்காரின் சமாதானக் கொள்கையையே மாற்றியமைக்கவும் செல்வாக்குள்ள சிலர் முயன்றுவருகின்றனர்.

இதிலுள்ள அபாயத்தை வெளிப்படுத்தி பஞ்சசீலக் கொள்கைக்காதரவாக சமாதானக் கவுன்சில் தேசம் பூராவும் பரவலான இயக்கம் நடத்தியாக வேண்டும்.

### ஆமதாபாத் கவுன்சில் கூட்டம்

இத்தகைய முக்கியத்துவம் பெற்ற இச்சமயத்தில் இம்மாதம் 27-ம் தேதி முதல் 30-ந் தேதி வரை ஆமதாபாத்தில் அகில இந்திய சமாதானக் கவுன்சிலின் பத்தாவது ஆண்டுவிழாக் கூட்டம் நடைபெறுகிறது.

இதில் கலந்துகொள்ள டாக்டர் சி. ஆர் கிருஷ்ணப்பிள்ளை, டைரக்டர் கே. சுப்ரமணியம், டி. ஜானகிராமன் திருவாளர்கள் கே.எஸ். வெங்கட்ராமன், சுவாமி சிதம்பரஞர், பி. எஸ். கார்வண்ணன், சோலை, ஜி கண்ணன், ரங்கமணி முதலியோர் சென்னை சமாதானக் கமிட்டியின் சார்பில் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ந-நி

## சீன நகரங்களில் சன்யாட்சன் தினக் கொண்டாட்டம்

பீகிங், நவ. 14—

நவ சீனத்தின் பிதா என்று கருதப்படும் டாக்டர் சன்யாட்சனின் 93-வது பிறந்ததின விழா சீனுவிலுள்ள பிரதான நகரங்களான பீகிங், ஷாங்ஹாய், நாங்கிங், காண்டன் முதலிய இடங்களில் கொண்டாடப்பட்டது. சிங்வம்ச மன்னர்களுக்கு எதிராகப் புரட்சி நடத்திய சன்யாட்சன் தாம் வாழ்ந்த நாட்களில் பெரும்பாலும் இந்த நகரங்களிலேயே இருந்தார். புரட்சிகர கோமிண்டாங் கம்யூனிஸ்ட் கட்சி பிரமுகர்கள் அவருக்கு அஞ்சலி செலுத்திஞர்கள்.

# சென்னை தமிழ் எழுத்தாளர் சங்க பேரவைக் கூட்டத்தில் குழப்பம்

சென்னை, நவ. 15—

15-11-59 ஞாயிறு சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பேரவைக் கூட்டம் திருவல்லிக்கேணி இளம்பிறைச் சங்கக் கட்டிடத்தில் திரு. மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் தலைமையில், காலை 9 மணிக்கு கூடியது.

சங்க அமைப்பு விதிகளை திருத்துவதற்காகவே முக்கியமாக இக் கூட்டம் கூட்டப்பட்டது.

இக்கூட்டத்தை நடக்கவொட்டாமல் ஒத்திவைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் வந்திருந்த குறிப்பிட்ட ஒரு அரசியல் கட்சியைச் சேர்ந்த சிலர் ஆரம்பத்திலிருந்தே குழப்பமும், கூச்சலும் விளைவித்துவந்தார்கள். முக்கியமாக சங்க விதிகளில் பொருள் இருக்கிறதோ இல்லையோ, வடமொழிச் சொற்களுக்குப் பதிலாக தூய தமிழ்ச் சொற்கள்தான் சேர்க்கப்பட வேண்டும் என்பது தான் அவர்கள் இறுதிவரையிலும் நடத்திய கூச்சலுக்கும் குழப்பத்திற்கும் காரணம். இந்தக் காரணத்தால் கூட்டம் நடத்த முடியாமல் கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் கண்ட எந்த விஷயத்தைப் பற்றியும் எவ்வித முடிவும் செய்யப்படாமல் மாலை 2 மணிக்கு கூட்டம் குழப்பத்தில் முடிந்தது. (ந. நி.)

## டாக்டர் கான்சாகிப் கொலைவழக்கில் தீர்ப்பு

### மரணதண்டனை விதிக்கப்பட்டது

ராவல்பிண்டி, நவ 11—

டாக்டர் கான்சாகிப் கொலை வழக்கில் மரணதண்டனை விதிக்கப்பெற்ற அட்டமுகமதுவின் அப்பீல் மனுவை மேற்கு பாகிஸ்தான் உயர்நீதி மன்றம் தள்ளுபடி செய்து தண்டனையை ஊர்ஜிதம் செய்தது.

அட்டமுகம்மதோடு காக்சார் தலைவர் அல்லாமா மாஷ்ரிகி உட்பட நான்கு பேர்கள்மீது கொலை குற்றம்சாட்டப்பட்டிருந்தது. அதில் மாஷ்ரிகியும் இதரஇரண்டு பேர்களும் கீழ்கோர்ட்டில் விடுதலை செய்யப்பட்டனர். அட்டமுகமதுவுக்கு செஷன்ஸ் கோர்ட் மரணதண்டனை விதித்தது.

## இன்றைய சினிமா

மதுரை : ஸ்ரீ லக்ஷ்மி—நவ்ரங்
மதுரை : பரமேஸ்வரி— பத்தினி தெய்வம்
மதுரை : ஸ்ரீ தேவி—அவள் யார்
மதுரை : சிட்டி சினிமா— அமர தீபம்
புதுக்கோட்டை : பழனியப்பா— பாகப் பிரிவினை
அரியலூர் : நடராஜா— காவேரியின் கணவன்
சோமனூர் : ஸ்ரீ குமார்— புதுமைப் பித்தன்
சிவகாசி : கனகலக்ஷ்மி— அவன் அமரன்
பொள்ளாச்சி : செல்வம்— பாகப் பிரிவினை
போடி : சென்ட்ரல் வாழவைத்த தெய்வம்

## மார்க்கெட் நிலவரம்

### தங்கம், வெள்ளி

சென்னை, நவ. 16—

| | |
|---|---|
| சவரன் | ரூ. 82— 4 0 |
| தங்கம் (ரெடி) | ரூ. 126— 4—0 |
| மூசை தங்கம் | ரூ. 124 0 0 |
| வெள்ளி 100 தோலா எடை | ரூ. 213 0 0 |
| வெள்ளி 1ரூ.எடை | ரூ. 2- 2 6 |

### மணிலா பயறு

| | |
|---|---|
| 531 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு (விற்பனை வரியுடன்) புது "பட்டாணி" | 171—172 |

### மணிலா எண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு டெலிவரி (8 F.F.A) (மொத்த விலை) ரெடி | ரூ. 345 00 |

### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| நவம்பர் | ரூ. 343—0 |
| டிசம்பர் | ரூ 335 0 |
| ஜனவரி | ரூ. 335—0 |
| 500 ரா. பாரம் 1 க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) திருப்பத்தூர் | ரூ. 330 00 |

### தேங்காய் எண்ணெய்

| | |
|---|---|
| 37 ரா. கொண்ட பாரம் 1-க்கு கொல்லம் சரக்கு எம். எஸ். மார்க்கு | 43 00 |
| அம்பு மார்க்கு | 41 00 |
| ராஜா மார்க்கு | 41 00 |

### கடலை புண்ணாக்கு

| | |
|---|---|
| "எக்ஸ்பெல்லர்" (160ரா.) | 25 50 |

## புளியந்தோப்பில் விலைவாசி குறைப்பு சர்வகட்சிக் கமிட்டி அமைப்பு

சென்னை, நவ. 15—

சென்னை புளியந்தோப்பில் 14-11-59-ந் தேதியன்று தமிழ்நாடு சர்வகட்சி விலை உயர்வு எதிர்ப்பு கமிட்டியின் வேண்டுகோளுக்கு இணங்க 33, 38-வது வட்டத்தைக் கொண்ட உணவுப் போராட்டக் கமிட்டி தோழர் எஸ். எம். சின்னப்பா (தமிழ்நாடு சோஷலிஸ்டு கட்சி) தலைமையில் நடந்தது.

### கம்யூனிஸ்ட் கட்சி சார்பில்

பி. கே. ஏழுமலை (கன்வீனர்), ஜி. ஆர். முனுசாமி, பி. கிருஷ்ணன், பி. வி. சுப்பையா, எஸ். சிவாநந்தம்.

### தமிழரசுக் கழக சார்பில்

அ. குப்புசாமி (கன்வீனர்), த. கண்ணப்பா, மாணிக்கம், ஏ. ர. பக்தவத்சலம், வி. ஏழுமலை.

### தமிழ்நாடு சோஷலிஸ்ட் கட்சி சார்பில்

எஸ். எம். சின்னப்பா (கன்வீனர்) ஏ. ஹகீம், எஸ். வி. பாலகிருஷ்ணன், வி. கே. துரைக்கண்ணு, ஜி. ஜெயராஜ்.

### புரட்சிகர தொழிலாளர் கட்சி சார்பில்

சென்சையா (கன்வீனர்) கேசவன், துரைசாமி மற்றும் இருவர் கொண்ட கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. மாவட்டக் கமிட்டி எடுக்கும் முடிவுகளை உடனுக்குடன் செய்வதென முடிவு செய்யப்பட்டது.

## ஹார்பர் தொகுதி சர்வ கட்சி உணவு விலைக்குறைப்புக் கமிட்டி அமைப்பு

சென்னை, நவ. 15—

15-11-59 ஞாயிறு பகல் 2 மணிக்கு கம்யூனிஸ்ட் கட்சி, தி. மு. க., தமிழரசுக் கழகம், நாம் தமிழர் கட்சி ஆகிய கட்சிகளின் பிரதிநிதிகள் கூட்டம் தோழர் கோ.செங்குட்டுவன் (தி. மு. க.) தலைமையில் நடைபெற்றது. தோழர் ஜி. முனுசாமி (கம்யூ) இன்றைய உணவு நிலை நெருக்கடியைப் பற்றியும், சர்வ கட்சிகளின் முன்னுள்ள கடமையை பற்றியும் தெளிவுரை தந்த பின் தொகுதிக் குழு ஒன்று அமைக்கப்பட்டது.

தோழர்கள் ஜி. முனுசாமி, யு. எம். உசேன், எம். பொறைக்கலம் (கம்யூ) எம். ஜெயராமன், பொன்னுசாமி, வி. சீ. தமிழ்தாசன் (தி.மு.க.), சி. வி. இராசகோபால், சோமசுந்தரம், க. நடராஜன், சுப்ரமணி (த. அ. க.), க. நடராஜன், கு. வடிவேலு, ப தேவராஜன் (நாம் தமிழர்) முதலியோர் அங்கம் வகிக்கின்றனர்.

## ஹார்பர் தொகுதி உணவு விலைக்குறைப்பு சைக்கிள் ஊர்வலம்

சென்னை, நவ. 15—

15-11-59 ஞாயிறு காலை துறைமுகத் தொகுதி உணவு விலைக் குறைப்பு சர்வ கட்சி சைக்கிள் ஊர்வலம் நடைபெற்றது. தோழர்கள் எம், பொறைக்கலம் (கம்யூ.), ஜெயராமன் (தி. மு.க., ராஜகோபால் (த.அ.க.) தலைமை தாங்க அணிவகுத்து வந்த 200க்கு அதிகமான தொண்டர்கள் உணவியக்க கோஷங்களிட்டு ஹார்பர் பூராவிலும் சுற்றி வரும்போது மக்கள் எல்லாம் ஊர்வலத்தினரை வரவேற்றும், வாழ்த்தியும் ஆரவாரம் செய்தனர்.

## சர்வகட்சி உணவு விலை குறைப்பு அமைப்புக் கூட்டம்

சென்னை, நவ. 14—

13-11-59 இரவு 8-30 மணியளவில் தோழர் ரத்தினம் (தி. மு. க.) தலைமையில் சைதை வ. உ. சி. படிப்பகத்தில் சர்வ கட்சி உணவு விலைக் குறைப்பு அமைப்புகூட்டம்நடைபெற்றது.

சர்வகட்சி அமைப்பு பற்றி தோழர் செல்லப்பா (கம்யூனிஸ்ட்)விளக்கவுரையாற்றினார்.

பிறகு தி. மு. க. சார்பில் ரத்தினம், கம்யூனிஸ்ட் சார்பில் தாமோதரன், தமிழரசுக் கழகம் சார்பில் கணேசன், சோஷலிஸ்ட் கட்சி சார்பில் ரங்கநாதன் ஆகியோர் சர்வகட்சிஅமைப்புகமிட்டியை அமைத்துநல்ல முறையிலே பணியாற்ற உறுதி பூண்டனர்.

பிறகு கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தாமோதரன் (கன்வீனர்) எஸ். கோவிந்தசாமி தி. மு. க. சார்பில் எம். ரத்தினம் (கன்வீனர்) டி. ஏ. ஆர். சிவானந்தம், த. அ. கழக சார்பில் கந்தையா (கன்வீனர்) சி. நாராயணசாமி, சோஷலிஸ்ட் கட்சி சார்பில் ரங்கநாதன் (கன்வீனர்) ஆனந்தன் ஆக கட்சிக்கு இருவர் வீதம் கமிட்டி அமைக்கப்பட்டது.

# சென்னையில் சர்வகட்சி நடவடிக்கை

## அமைச்சர் பக்தவத்சலம் வீட்டின் முன் ஆர்ப்பாட்டம்

சென்னை, நவ. 15—

உணவுப் பொருள் விலைக் குறைப்பு சர்வ கட்சி போராட்டக் குழு 15-11-59 முதல் 22-11-59 வரை 1 வாரம் உணவுப் பொருள் விலைக்குறைப்பு வாரமாகக் கொண்டாடும்படி விடுத்த அறிக்கைக் கிணங்க இன்று காலை 9 மணியளவில், மயிலைத் தொகுதி சர்வ கட்சியினர் சைக்கிள் ஊர்வலம் அடையாறு ஈராஸ் தியேட்டர் அருகிலிருந்து ஆரம்பமாயிற்று.

### சர்வகட்சிக் குழுவின் கன்வீனர்கள்

தோழர் பி.ஆர். இராமலிங்கம் (கம்யூ) டி.வி. ஆனந்தன் (தி. மு. க.) இரா. ஏழுமலை (தமிழரசுக் கழகம்) ஆகியோர் ஊர்வலத்திற்குத் தலைமை தாங்கினர். நகர மன்ற தி. மு. க. உறுப்பினர்கள் தோழர்கள் கபாலி, துளசிங்கம், ஏரியா கம்யூனிஸ்ட் கட்சி தோழர்கள் ஏ. மணி, கிருஷ்ண பிள்ளை, நடராசன், கோவிந்தன் ஆகியோர் ஊர்வலத்தில் அணிவகுத்தனர். தி. மு. க., கம்யூனிஸ்ட், தமிழரசுக் கழகக் கொடிகள் நூற்றுக்கணக்கில் கம்பீரமாகப் பட்டொளி வீசிப்பறக்க முந்நூற்றுக்கு மேற்பட்ட சைக்கிள்கள்சென்றன.

### ஊர்வலம்

உணவு அமைச்சர் பக்தவத்சலம் வீட்டின் முன் சிறிது நேரம் தங்கி ,, மலிவான விலையில் உணவு கொடுக்க முடியாத உணவு அமைச்சரே ராஜிநாமா செய்! உணவுப் பதுக்கல்காரர்களுக்கு பாதுகாவலராயுள்ள உணவு அமைச்சரே ராஜிநாமாச் செய்! உணவுப் பிரச்சினையைத் தீர்க்க முடியாத உணவு அமைச்சரே வெளியேறு! படி அரிசி 12 அணாவிற்குக் கொடு! 500 குடும்பங்களுக்கு ஒரு நியாயவிலைக் கடை திற!'' என்று முழக்கமிட்டு ஆர்ப்பாட்டம் செய்தனர்.

## உணவு விலைக் குறைப்புக்காக வடபழநியில் ஊர்வலம்

சென்னை, நவ. 15—

கோடம்பாக்கம் 92-வது வட்டம் உணவு விலைக் குறைப்புக் குழுவின் சார்பாக ஒரு பெரும் ஊர்வலம் ஒன்று காலை 9-30 மணி அளவில் எம். ஜி. ஆர். திடலிலிருந்து புறப்பட்டு முக்கிய வீதிகளின் வழியாகச் சென்று மீண்டும் புறப்பட்ட இடம் சேர்ந்து முடிவடைந்தது.

இந்த ஊர்வலத்தில் கம்யூனிஸ்ட் கட்சி, திராவிட முன்னேற்ற கழகம், தமிழரசுக் கழகம், சென்னை சினிமா தொழிலாளர்கள் சங்கம், பாரதி கலை மன்றம், மற்றும் சக நடிகர்களும் கலந்து கொண்டனர். (ந. நி.)

## விலைவாசி குறைப்பு சர்வ கட்சி ஊர்வலம்

சென்னை, நவ. 15—

பேஸின் பிரிட்ஜ் தொகுதி விலை குறைப்பு சர்வகட்சி கமிட்டியின் சார்பாக 15-11-59 காலை 9 மணிக்கு தண்டையார்பேட்டை மணிக்கூண்டிலிருந்து தமிழரசுக் கழகம், தி மு. க., கம்யூனிஸ்ட் கட்சி, தொழிற்சங்கங்கள், மன்றங்கள் தம் தம் கொடிகளுடன் கன்வீனர்கள் திரு. சி.ஆர். பாலசுந்தரம் எம்.சி. (தி.மு.க.), திரு. பி. கருப்பண்ணன் எம்.சி. (கம்யூனிஸ்ட்), திரு. மூ. பொ. பகவத்சிங் (தமிழரசுக் கழகம்) தலைமையில் மாபெரும் ஊர்வலம் அணிவகுத்து பல வட்டங்களின் முக்கிய தெருக்களின் வழியாக விலை உயர்வு எதிர்ப்புக் கோஷங்களைக் கோஷித்துக் கொண்டு சென்று ஏகாம்பரீஸ்வரர் கோயில் அருகாமையில் வந்து முடிவுற்றது. —ந.நி.

## பு.சோ.வின் மீது மீண்டும் பட்டம் வலை வீசுகிறார்

திருவனந்தபுரம், நவ. 15—

கம்யூனிஸ்ட் எதிர்ப்பு தேர்தல் கூட்டணியில் புரட்சிகர சோஷலிஸ்ட் கட்சியையும் சேர்த்துக் கொள்வதற்காக வேண்டி திரும்பவும் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு, கேரள பி. சோ. கட்சி அதன் தலைவர் பட்டம் தாணுப் பிள்ளைக்கு அதிகாரம் வழங்கியுள்ளது.

ஆனால், பு.சோ. கட்சிக்கு இந்த தேர்தல் கூட்டணியால் எட்டு தொகுதிகள் வழங்கப்பட்டதும், அதை நிராகரித்து விட்டு கேரள பு.சோ. கட்சி 20 ஸ்தானங்களில் போட்டியிட உத்தேசித்துள்ளதும் வாசகர்கள் அறிந்ததே.

## திருவல்லிக்கேணி உணவுப் பொருள் விலைக் குறைப்பு சர்வகட்சிக் குழு

சென்னை, நவ. 15—

திருவல்லிக்கேணி தொகுதியில் இன்று மாலை 3 மணிக்கு சர்வ கட்சி பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு நீலநாராயணன் (தி.மு.க) தலைமை வகித்தார்.

கா.மு. கணேசன் (கம்யூ) சர்வ கட்சி அமைப்பின் அவசியத்தை விளக்கிப் பேசினார்.

நீலநாராயணன் (தி.மு.க.) கா. மு. கணேசன் (கம்யூ) ஜாண் பால்கோ (தமிழ்நாடு சோ. கட்சி) வி என். சாமி, (தமிழரசுக் கழகம்) திரு மாறன், (நாம் தமிழர்) ஆகியவர்கள் கன்வீனர்களாகத்தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

துரைக்கண்ணு (நகரசபை உறுப்பினர்) பார்த்தசாரதி, எஸ். ஏ. பாண்டியன், வி. என். சுப்ரமண்யம் ஆகியவர்கள் தி.மு.க. சார்பிலும் பார்த்தசாரதி, ஆர். எஸ். மணி, தீனதயாளு, வெங்கட்ராவ் ஆகியவர்கள் கம்யூனிஸ்ட் கட்சி சார்பிலும், நா. அண்ணாமலை ஜெயராமன், ஆறுமுகம், தில்லைக்கூத்தன் ஆகியவர்கள் தமிழரசுக் கழகம் சார்பிலும், பி. வி. நடராஜன், ஏ. கே. பங்காருசாமி ஆகியவர்கள் தமிழ்நாடு சோஷலிஸ்ட் கட்சி சார்பிலும், கமிட்டி உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## ஒரு கையால் கொடுத்து மறு கையால் பறிக்கிறார்கள்

### முதலாளித்துவ நாடுகள் உதவிபற்றி டாக்டர் சுகர்ணோ கருத்து

ஜகர்தா, நவ. 15—

"நம்முடைய லட்சியத்திற்கு ஏற்ற உதவிகளையும், அரசியல் நிபந்தனையற்ற உதவிகளையும் நாம் வரவேற்கிறோம். சில சமயங்களில் நமக்கு உதவி செய்பவர்கள் ஒரு கையில் கொடுத்து விட்டு இன்னொரு கையால் எடுத்துக்கொண்டு போய்விடுகிறார்கள்'' என்று இந்தோனேஷியக் குடியரசுத் தலைவர் வெளிநாட்டு உதவிகள் பற்றிக் கூறுகையில் குறிப்பிட்டார்.

கொழும்புத் திட்ட மாநாடுகளில் கலந்துகொள்வதற்காக வந்துள்ள 21 நாட்டுப் பிரதிநிதிகளுக்கு அளித்த வரவேற்பு விருந்தின் போத அவர் அவ்வாறு கூறினார்.

டாக்டர் சுகர்ணோ மேலும் பேசுகையில், "விலைவாசிகளை தமது விருப்பம் போல் ஏற்றும் இன்றைய முதலாளிகளின் மார்க்கெட் சூதாட்டத்தால் சில சமயங்களில் ஒரு வருடம் முழுமையும் கிடைக்கும் உதவி ஒரே நாளில் போய்விடுகிறது'' என்றார்.

"சென்ற நூற்றாண்டில் மூலப் பொருட்களை வாங்கும் நாடுகள்தான் மார்க்கெட்டில் ஆதிக்கம் செலுத்தின: மூலப் பொருட்களை உற்பத்தி செய்யும் நாடுகளுக்கும் நியாயமான விலைகளை நிர்ணயிப்பதில் பங்கு இருக்கவேண்டும்'' என்று கூறினார்.

அவர் மேலும் கூறுகையில் பஞ்சத்தையும், பசியையும் இந்தோனேஷிய மண்ணை விட்டு விரட்டினால் தான் இந்நாடு பூரண சுதந்திரம் பெறமுடியும் என்று கூறினார்.

நிபந்தனைகளோடு, குறிப்பாக அரசியல் நிபந்தனையுடன் கூடிய உதவிகளை இந்தோனேஷியா என்றும் ஏற்காது என்ற டாக்டர் சுகர்ணோ விருந்து வைபவத்தில் பேசிய சொற்பொழிவை இந்தோனேஷியப் பத்திரிகைகள் வரவேற்றிருக்கின்றன. வெளிநாட்டு உதவி விஷயத்தில் சுகர்ணோ கூறியதையே அரசாங்கக் கொள்கையாகக் கடைப்பிடிக்க வேண்டுமென்று "பிண்டாங் ஷயூமர்'' என்ற நாளிதழ் தலையங்கம் எழுதியுள்ளது.

கொழும்புத் திட்ட நாடுகளுக்கு உதவி செய்யும் அமெரிக்காபின்தங்கியநாடுகளின் மூலப் பொருள் வாணிபத்தில் ஆதிக்கம் செலுத்த விரும்புவதை அவ்விதழ்சுட்டிக்காட்டி எச்சரித்திருக்கிறது. மேலும் இத்தகைய உதவிகளின் மூலம் ஏகாதிபத்திய வல்லரசுகள் அந்நாடுகளின் வாணிபத்தை தங்களுடன் இணைத்துக் கொள்ளப் பார்க்கின்றன என்பதையும் அவ்விதழ் தெளிவுபடுத்தியிருக்கிறது.

### "சின்போ'' கருத்து

'சின்போ' என்ற நாளிதழ் உதவி செய்யும் நாடுகள் உதவி பெறும் நாட்டின்தேசியநலன்களை அடமானமாகக் கேட்கின்றன. அமெரிக்காவிலிருந்து உதவி பெற்ற பிலிப்பைன்ஸ் நிலைமையும் லெபனானுக்கு உதவுவதில் அமெரிக்கா கடைப்பிடித்துவரும் கொள்கையும் நன்கு தெரியும்.

எனவே இந்தோனேஷியா வெளிநாட்டு உதவிக்காக தன்னுடைய தேசீய நலனையே அடமானம் வைக்கக் கூடாது என்று தலையங்கம் எழுதி, சுகர்ணோவின் சொற்பொழிவை வரவேற்றிருக்கின்றது.

## எதியோப்பிய இளவரசர் டெல்லி விஜயம்

புதுடெல்லி, நவ. 15—

எதியோப்பியாவின் முடிக்குரிய இளவரசரும் அவரது மனைவியாரும் இந்தியா வந்துள்ளனர்.

## திரைப்பட விழா

பம்பாய், நவ. 14—

ஜெர்மன் ஜனநாயகக் குடியரசிலிருந்து வந்துள்ள தலை சிறந்த திரைப்படங்களின் விழாவை இங்கு பம்பாய் மேயர் பி. டி. போரலே துவக்கிவைத்தார்.

## நாடு கடத்தப் பெற்ற தொழிற்சங்கத் தலைவி

### பஸூதோலந்தில் அபயம்

மசிரு (ஸூதோல), நவ. 15—

தென் ஆப்பிரிக்க அரசாங்கத்தால் நாடு கடத்தப்பட்ட தொழிற்சங்கத் தலைவி திருமதி எலிஸபெத் மெபிகேவ் பஸூதோலந்தில் ஒரு ரோமன் கத்தோலிக்கமடத்தில் அடைக்கலம்புகுந்துள்ளதாகச் செய்திவந்துள்ளது.

இந்த அம்மையாருக்கு 11 குழந்தைகள் இருக்கின்றன. இவருக்கு வயது 42. ரோமாவிலிந்து 20 மைல்களுக்கப்பால் மெஹலெங்க் என்னுமிடத்திலுள்ள செயின் பெனிடிக் என்னும் மடத்தில் அவர் அடைக்கலம் புகுந்துள்ளதாகத் தெரிகிறது.

பிரிட்டனுக்குச் சொந்தமான இடத்தில், அந்த அம்மையார் இருப்பதற்கு பிரிட்டிஷ்அரசாங்க நிர்வாகம் அனுமதிக்குமெனில், அந்த அம்மையார் அங்கு இருப்பது பற்றி தனக்கு ஆட்சேபனை எதுவுமில்லை என்று தென் ஆப்பிரிக்கப் பிரதமர் டாக்டர் ஹெண்ரிக் வெர்ரோர்ட் குறிப்பிட்டதாக ஜோகான்ஸ்பர்க் பத்திரிகை ஒன்று குறிப்பிடுகிறது.

அந்த அம்மாள் இருக்கும் இடத்திற்குப் போய்ச் சேர்வதற்கு அவர் குடும்பத்தினர் விரும்பினால் பிரயாணச் செலவை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளத் தயார் என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

அந்த அம்மாளை நாடு கடத்த திங்கட்கிழமை உத்தரவு பிறப்பிக்கப்பட்ட போது ஏற்பட்ட கிளர்ச்சியில் ஒருவர் கொல்லப்பட்டார்; 11 பேருக்குக்காயம் ஏற்பட்டது.

### 10 கருப்பர்கள் கைது

இந்த கிளர்ச்சியை முன்னிட்டு சமாதான பங்கம் விளைவித்ததாக 10 கருப்பர்கள் கைது செய்யப்பட்டிருந்தார்கள். அவர்களனைவரும் நேற்று மாஜிஸ்திரேட் கோர்ட்டுக்குக் கொண்டுவரப்பட்டார்கள். குற்றம் சம்பந்தமாக எந்தவிதமான சாட்சியுமில்லை.

அவர்கள் அனைவரும் திரும்பவும் நவ. 27ம் தேதிவரை ரிமாண்டில் வைக்கப்பட வேண்டுமென உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

### மாணவர்கள் எதிர்ப்பு

போர்ட் ஹெயரில் வெள்ளையரல்லாத சர்வ கலாசாலையைச் சேர்ந்த மாணவர்கள் சர்க்காருக்கு விரோதமாகக் கிளர்ச்சி ஆரம்பித்துள்ளார்கள். சர்வ கலாசாலையில் உள்ள 9 வெள்ளை உத்தியோகஸ்தர்களை வேலையை விட்டு நீக்கியதற்காகவே இந்த மாணவர்கள் கிளர்ச்சி தொடங்கியுள்ளார்கள்.

ஆப்பிரிக்க மாணவர்கள், இந்திய மாணவர்கள் ஆகிய கருப்பு இன மாணவர்கள் அடங்கிய கூட்டமொன்று நடைபெற்றது.

சர்வகலாசாலையில் ஏற்பட்டுள்ள பாதுகாப்பற்ற நிலையற்ற சூழ்நிலை காரணமாக அன்றாட கல்லூரி நடவடிக்கைகள் சரிவர நடைபெறுவதற்கு முடியாமல் இருக்கிறது என்று சர்க்காருக்கு எச்சரிக்கை விடுக்கப்பட்டுள்ளது.

43 ஆண்டுகளுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட இந்த கல்லூரியின் நிர்வாகம் ஜன 1-ம் தேதி அரசாங்கத்தின் கைக்கு மாறியது. அரசாங்கம் சகல இந்திய மாணவர்களையும், கருப்பு மாணவர்களையும் ஹோசா எத்னிக் கோஷ்டியைச் சேராத ஆப்பிரிக்க மாணவர்களையும் கல்லூரியிலிருந்து நீக்கிவிட முயற்சி செய்கிறது.

## கலப்பட எண்ணெயால் வந்த வினை

### 10 ஆயிரம் பேருக்கு நோய் 27 வியாபாரிகள் கைது

#### மொராக்கோவில் சம்பவம்

ரபாத், நவ. 15—

விமான எண்ணெய் கலந்த எண்ணெயை உணவு தயாரிக்க உபயோகப்படுத்தியதன் காரணமாக மொராக்கோவில் சுமார் 10,000 மக்களுக்கு சுகவீனமேற்பட்டது. மொராக்கோ சுகாதார மந்திரி நேற்று இரவு இச்செய்தியை வெளியிட்டார்.

சுமார் 6000 மக்கள் பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டுள்ளார்கள். இதுவரையில் யாதொரு உயிர்ச் சேதமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

கசாபிளாங்காவில் உள்ள அமெரிக்க விமான தளத்தில் மிச்சப்பட்ட விமான எண்ணெய் யந்திரங்களுக்கு உபயோகப்படுத்தும் முறையில் விற்கப்பட்டது.

ஆலிவ் எண்ணெயுடனும், 'பீன்ஸ்' எண்ணெயுடனும் கலந்து இந்த எண்ணெயை உணவு தயாரிக்கும் எண்ணெயென்று விற்ற குற்றத்திற்காக27 வியாபாரிகள் கைது செய்யப்பட்டுள்ளார்கள் என்று போலீஸார் அறிவிக்கின்றனர்.

நாட்டின் பொது சுகாதாரத்திற்குப் பங்கம் விளைவிக்கும் முறையில் நடந்து கொண்ட குற்றத்திற்காக இந்த வியாபாரிகளுக்கு மரண தண்டனை விதிக்கப்படலாம். இந்தச் சட்டத்தை மொராக்கோ அரசாங்கம் இந்த வருஷம் நவம்பர் மாதம் 4-ம் தேதி நிறைவேற்றியுள்ளது.

மேலும், இந்த விமான எண்ணெய் கலக்கப்பட்டதாகக் கருதப்படும் பலவித தலைக்குத் தேய்க்கும் வாசனைத் தைலங்களையும் வாங்கக்கூடாது என்று போலீஸார் தடைசெய்துள்ளனர். ஏனெனில் அந்த எண்ணெயை உபயோகப்படுத்தினால் ரோமம் உதிர்ந்து விடுகிறது.

## மாஜி ஆஜாத் காஷ்மீர் தலைவர் கைது

### அரசாங்க விரோதப் பிரச்சாரம் செய்ததாகக் குற்றச்சாட்டு

ராவல்பிண்டி, நவ. 15—

முன்னாள் "ஆஜாத் காஷ்மீர்'' தலைவர் சர்தார் முகம்மது இப்ராகிம் நேற்று ராணுவச் சட்டத்தின்படி கைதுசெய்யப்பட்டார். அவர் பாகிஸ்தான் அயூப்கான் அரசின்மீது மக்களுக்கு அதிருப்தி ஏற்படும் முறையில், அரசாங்க விரோதப் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்தார் என்று குற்றம்சாட்டப்பட்டுள்ளது.

சர்தார் இப்ராகிம் நேற்று அவரது ராவல்பிண்டி இல்லத்திலிருந்து சிறைச்சாலைக்குக் கொண்டுபோகப்பட்டார். அவர் ஆஜாத் காஷ்மீர் தலைமைப் பொறுப்பிலிருந்து நீக்கப்பட்ட பின்னரும் "ஆஜாத் காஷ்மீர்'' முஸ்லீம் மாநாட்டின் தலைவராக இருந்தார்.

## புத்தர் பிரதிமை ஒரு கையில் புகையும் துப்பாக்கி மறு கையில்!

### வேஷதாரிகளுக்கு வினோபாஜி சூடு

அமிருதசரஸ், நவ. 15—

பல நூற்றாண்டுகளாக நாட்டில் ஆன்மிக உணர்வு வளர்ந்து வந்திருப்பதுபற்றி இங்கு பேசிய வினோபாஜி குறிப்பிட்டார். தமது பாதயாத்திரையின்போது மக்களிடை இந்த உணர்வு இருப்பதைத் தாம் காண்பதாகவும் கூறினார்.

ஆனால் இந்த பக்தி உணர்வு பொது வாழ்வில் காணப்படவில்லை என்று வருத்தம் தெரிவித்தார்.

சில தலைவர்கள் இரட்டை வேஷம் போடுகிறார்கள். இதன் விளைவாக சமயத்திற்கே கெட்ட பெயர் ஏற்படுகிறது என்றார்.

நமது வீட்டில் நாம் எல்லோரிடமும் அன்பாக இருக்கிறோம் வெளியே வந்தவுடன் பகைமையைப் பிரச்சாரம் செய்கிறோம். பொது வாழ்விலிருந்து பகைமையை விரட்டியடிக்க வேண்டும் என்று அவர் கோரினார்.

இந்த சந்தர்ப்பத்தில் வினோபாஜி இலங்கைப் பிரதமர் படுகொலை செய்யப்பட்ட படுகோரச் செயலைக் குறிப்பிட்டார். பண்டாரநாயகாவைக் கொலை செய்த பேர் வழி ஒரு கரத்தில் புத்தரின் பிரதிமையும் மறு கரத்தில் புகையும் துப்பாக்கியும் வைத்திருந்தான் என்று வினோபாஜி கூறினார். பூதான இயக்கமே நாட்டுக்கு விமோசனம் என்றார்.

## போராடும் அல்ஜீரியாவுக்கு ஈராக் உதவி

பாக்தாத், நவ. 15—

அல்ஜீரியாவில் பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தினால் வேட்டையாடப்பட்ட சுதந்திர வீரர்கள், டுனிஷியா நாட்டுக்கும் மொராக்கோ நாட்டுக்கும் அகதிகளாக வந்திருக்கிறார்கள்.

அவர்களுக்கு ஈராக் பிரதமர் காசிம் ஏராளமான உதவிகளைத் தொடர்ந்து செய்து வருகிறார். பணம், அரிசி, பேரீச்சம்பழம், கம்பளி, பருத்தி ஆடைகள், போர்வைகள், சோப்பு முதலிய பல கப்பல்களில் அல்ஜீரிய அகதிகளுக்குகாசிம்அனுப்பியிருக்கிறார்.

ஏற்கனவே 20 லட்சம் டினார் (ஈராக் ரூபாய்) அனுப்பப்பட்டிருக்கிறது.

ஈராக் நாட்டை பைசல் மன்னன் அண்டுவந்தபோது, அமெரிக்க, பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகளுடன் சேர்ந்துகொண்டு, அராபிய சுதந்திரப் போராட்டங்களை நசுக்கவும், சதிகள் புரியவும் உளவு நடவடிக்கைகளுக்காகவும் செலவழிக்க ஒதுக்கப்பட்டிருந்த முழுவதையும், இப்பொழுது காசிம்காலத்தில், ஏகாதிபத்யங்களை எதிர்த்து தேச விடுதலைக்காகப் போராடிவரும் வீரர்களுக்கு செலவழிக்கப்படுகிறது.

# செங்கற்பட்டு ஜில்லா சர்வகட்சி விலை உயர்வு எதிர்ப்புக் கமிட்டி

## கலெக்டரிடம் மகஜர் சமர்ப்பிக்க முடிவு

காஞ்சீபுரம், நவ. 11—

10-11-59ம் தேதி செவ்வாய் மாலை 4 மணிக்கு காஞ்சீபுரம் முனிசிபல் தங்கும் விடுதியில் தோழர் சி. வி. எம். அண்ணாமலை (தி.மு.க.) தலைமையில் சர்வ கட்சிப் பிரதிநிதிகள் (தி.மு.க. சோஷலிஸ்டு, தமிழரசுக் கழகம், கம்யூனிஸ்டு) 38 பேர்கள் கூடினர். கட்சிகளின் முக்கிய பிரதிநிதிகளாக கீழ்க்கண்டவர்கள் கலந்துகொண்டனர்.

### தி. மு. க. சார்பில்

திரு. சி. வி. எம். அண்ணாமலை, தி. நா. சம்பந்தம், ஜே. ஏ. வஹாப்.

### கம்யூனிஸ்டு கட்சி சார்பில்

திரு. கே. எஸ். பார்த்தசாரதி, ஏ. சி. குருசாமி, சி. கே. மாதவன் மற்றும் டி. ஜி. சுந்தரமூர்த்தி (சோஷலிஸ்ட்), கே. ராஜப்பா (தமிழரசுக் கழகம்) ஆகியோர் கலந்துகொண்டனர்.

தோழர் கே. எஸ். பார்த்தசாரதி அனைவரையும் வரவேற்றுப் பேசினார். தலைவர் முன்னுரைக்குப் பின் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன:

2-11-59ந் தேதி சென்னையில் கூடிய 'சர்வகட்சி விலை உயர்வு எதிர்ப்புக் கமிட்டியின் முடிவுகளை வரவேற்கிறது. இம் மாவட்டத்தில், அம்முடிவு நடைமுறையில் உடனடியாக அமுல் நடத்துவது.

### சர்வகட்சி கமிட்டி

"செங்கற்பட்டு ஜில்லா சர்வ கட்சி விலை உயர்வு எதிர்ப்புக் கமிட்டி'' கீழ்க்கண்டவர்களைக் கொண்டு அமைக்கப்பட்டது.

**தி. மு. க.**

திருவாளர்கள் சி. வி. எம். அண்ணாமலை, ஜே. ஏ. வஹாப், தி. நா. சம்பந்தம், மீஞ்சூர் கேசவன்.

**கம்யூனிஸ்டு :**

திருவாளர்கள் கே. எஸ். பார்த்தசாரதி, ஏ. சி. குருசாமி, சி. கே. மாதவன், எம். எ. வர்ஹீத்.

**தமிழரசுக் கழகம் :**

திருவாளர்கள் கே. ராஜப்பா குமாரத் தேவர், எஸ். கே. பால சுப்ரமண்யம், குப்புசாமி.

**தமிழ்நாடு சோஷலிஸ்ட் கட்சி :**

திருவாளர்கள் டி. ஜி. சுந்திரமூர்த்தி, என். பி. லோகநாதன், கே. கே. விநாயகம், கே. வரத ராமானுஜம்.

சி. கே. மாணிக்கம், ஜில்லா விவசாயிகள் சங்கம், மேலும் திருவாளர்கள் கே. எஸ். பார்த்தசாரதி, சி. வி. எம். அண்ணாமலை, கே. ராஜப்பா, டி. ஜி. சுந்தரமூர்த்தி ஆகியவர்கள் கமிட்டியின் செயலாளர்களாக இருப்பதென முடிவு செய்யப்பட்டது.

மாவட்டத்திலுள்ள தாலுகா தாசில்தாரர்களிடம் 19-11-59-ம் தேதி சர்வகட்சி விலைவாசிஉயர்வு எதிர்ப்புக் கமிட்டி வைத்துள்ள கோரிக்கைகளடங்கிய மகஜரை சமர்ப்பிக்கவேண்டுமென்றும், ஜில்லா சர்வ கட்சிக் கமிட்டியின் உறுப்பினர்கள் கலெக்டரிடம் மகஜர் சமர்ப்பிப்பது என்றும், 15-11-59 முதல் 22-11-59 வரை ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள் நடத்தி உணவு விலை உயர்வு எதிர்ப்பு வாரமாக அனுஷ்டிக்கவேண்டுமென்றும், முனிசிபாலிட்டிகள் பஞ்சாயத்து போர்டுகளில் சர்வ கட்சி கமிட்டி தீர்மானத்தை நிறைவேற்ற முயற்சிக்க வேண்டுமெனவும், முடிந்த வரையில் மேற்படி போர்டுகளின் சார்பில் தூதுகோஷ்டியாக கலெக்டரை சந்திக்கவேண்டுமெனவும் தீர்மானிக்கப்பட்டது (ந நி.)

## ரோடு போடுவதைக் கண்டு ஆப்கன் மலை ஜாதியினர் ஓடிவருகிறார்கள்!

லண்டன், நவ. 15—

ஆப்கானிஸ்தானத்திலிருந்து மங்கல் மலை ஜாதியினர் சிலர் பாகிஸ்தானுக்கு ஓடிவந்தார்கள் அல்லவா? அவர்கள் ஏன் ஓடிவந்தார்கள் என்பதற்கான காரணத்தை 'டெய்லி டெலிகிராப்'' என்ற பத்திரிகை வெளியிட்டிருக்கிறது.

ஆப்கானிஸ்தானத்தில் மங்கல் மலை ஜாதியினர் வசிக்கும் இடங்களில் புதிதாக பாதை அமைக்கும் வேலைகள் நடைபெறுகின்றன. போக்குவரத்து வசதிக்காக பாதை அமைக்கிறார்கள் என்பதை அறியாத அப்பாவி மலை ஜாதி மக்கள் ஏதோ நடைபெறுமென்று பயந்து ஓடிவருகிறார்கள். மேலும் பாதை அமைக்கும் பணிக்கு சோவியத் யூனியன் உதவி செய்வதால், மதத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் வந்துவிட்டார்கள் என்று மலை வாழ் மக்களிடம் சிலர் பீதியைக் கிளப்பி விட்டிருக்கிறார்கள். இந்தச் செய்தி ஓடிவந்த ஒரு மலை ஜாதித் தலைவனே 'டெய்லி டெலிகிராப்' பத்திரிகை நிருபரிடம் தெரிவித்ததிலிருந்து தெரிகிறது.




## திருச்சி

18—11—59

### காலை முதல் ஒலிபரப்பு

7-00 இசைக்கதிர் துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி 7-30 எஸ். நரஸம்மா வீணை 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8 15 ஒலிபரப்பு முடிவு.

### இரண்டாவது ஒலிபரப்பு

12-30 நடுத்தரப் பள்ளிகளுக்கு 1-00 பெண்ணுலகம் 1-30 பரிதோஷ் ஸீல் வயலின் 1-40 ஹிந்தியில் செய்தி, 1-50 கடலூர் எம். ஜயலட்சுமி (மெல்லிசை) 2-00 தமிழில்செய்தி 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு 2-40 இடை வேளை 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

### மாலை மூன்றாவது ஒலிபரப்பு

4-45 விவித பாரதி கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 இசைப்பயிற்சி 6-00 அறிவிப்புகள் 6 05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7 15 தமிழில் செய்தி 7-30 கடற்காவல் இந்திய கப்பற்படை பற்றிய சித்திரம் 7-45 செய்தி விளக்கம் எஸ். ஆர். முத்துசுவாமி பேச்சு 8-00 எஸ். நரஸம்மா வீணை 8-30 டெல்லி அஞ்சல் 8-50 என். ஸி. வசந்தகோகிலம் 9-00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 வள்ளுவர் சொல்லோவியம் 9-20 ஸ்வரப்பெருக்கம் 9-30 திரைப்பட இசை 10-00 ஒலி பரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ் கிருஷ்ணசாமி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே, சென்னை-1
Janasakthi
Broadway, Madras-1.